உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




| தொகுதி | பிரமோதூதஸு சித்திரைமீ ௧௳ | பகுதி |
|---|---|---|
| 15 | 1930ஸு ஏப்ரல்மீ 13௳ | 10 |


## கடவுள் வணக்கம்.

ஆதிக்க நல்லினை யாரிந்த மாயைக்கெ
னறிவின்றி யிடமில்லையோ
அந்தரப் புஷ்பமுங் கானலின் னீருமோ
ரவசரத் துபயோகமோ
போதித்த நிலையையு மயக்குதே யயயநான்
புக்கவருள் தோற்றிடாமல்
பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தியென்
புந்திக்குள் இந்த்ரசாலம்
சாதிக்குதே யிதனை வெல்லவு முபாயநீ
தந்தருள்வ தென்று புகல்வாய்
சண்மத ஸ்தாபனமும் வேதாந்த சித்தாந்த
சமரசநிர் வாகநிலையும்
மாதிக்கொ டண்டப் பரப்பெலா மறியவே
வந்தருளு ஞானகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே. (1)

கலங்காத நெஞ்சுடைய ஞானதீரர்
கடவுளுனைச் சரணவே காயமாதி
புலங்காணார் காலொருவன் ஞானம் பேசிப்
பொய்க்கூடு காத்ததென்ன புதுமை கண்டாய். (2)

கன்னலுடன் முக்கனியும் கற்கண்டும் சீனியுமாய்
மன்னுமின்ப வாரமுதை வாய்மடுப்ப தென்னாளோ. (3)

# அரும்பொருள் விளக்கம்

(1) இதனால் மாயையின் அதிகாரத்தை விளக்குகின்றார்.

(இ-ள்.) அறுவகைச் சமயங்களின் உண்மைகண்டு நிலை நாட்டும் ஆற்றலையும், வேதாந்த சித்தாந்தங்களைச் சமரசமாகப் பாவித்து விருவகிக்கத் தக்க சாமர்த்தியத்தையும், அஷ்டதிக்குகளோடு சகல அண்டங்களும் அறியும்படி வந்து அடியேனுக்கு அருளிச் செய்த ஞானாசாரியனே! மந்திரங்களை உபதேசித்த தேசிகனே! யோகசாஸ்திர நுணுக்கங்களை விளக்கியருளிய குருமூர்த்தி! திருமூலருடைய மரபில் எழுந்தருளிய மௌன குருவே! இந்த மாயைக்கு இவ்வளவு ஏற்றமும் அதிகாரமுங் கொடுத்தவர்கள் யார்? இதற்கு எனது அறிவைப் பற்றிக்கொண்டு தொல்லை விளைப்பதைவிட வேறு இடமும் வேலையும் இல்லையா? ஆகாயத்தாமரையும், கானல் நீரும் ஏதாவது ஒரு சந்தர்ப்பத்திலாவது உபயோகம் ஆகுமா? ஆகாது. இவைகளுக்கு நிகராகிய—வெறும் தோற்றப் பிரபஞ்ச வாஞ்சையில், நீ போதித்த உயர் நிலையையும் மயக்கி—என் அறிவை ஈடுபடச் செய்துவிட்டதே இம்மாயை! நான் சரண் புகுந்திருந்த அருளைச் சிறிதேனும் எனக்குத் தோன்றச் செய்யாமல் மாயையே மேலோங்கி நின்று ஆதிக்கம் பெற்று இப்பொய்யான உலகினை மெய்யாக நிலைநாட்டி என் அறிவினில் இந்திரஜால வித்தைகளை எல்லாம் காட்டிக்கொண்டிருக்கின்றதே. இக்கொடிய மாயையை வெல்லும்படியான தந்திரத்தை நீ எனக்குப் போதித்தருளுவது எந்த நாள் என்று கூறுவாயாக என்பதாம்.

ஆதிக்கம்—அதிகாரம், அழுல். அந்தரம்—ஆகாயம். கானல் நீர்—பேய்த்தேர். அபயம்—சரண். சண்மதம்—ஆறுமதங்கள். அவையாவன வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்பன. புறச் சமயங்கள் என்பன ஆறு. அவையாவன உலகாயதம், ஆருகதம், பௌத்தம், மீமாம்சம், பாஞ்சராத்திரம், மாயாவாதம் என்பனவாகும்.

(2) இதனால் தாம் வெறும் வாசாஞானம் பேசிக்கொண்டு தேகாபிமானம் விடாமல் இருப்பதாகக் கூறி வருந்துகிறார்.

(இ-ள்.) இறைவனே! ஒரு சிறிதும் கலங்காத மனவுறுதி படைத்த ஞான வைராக்கிய பெரியோர் உன்னைக் கண்டு களிக்கும் பொருட்டே தேகாதி விஷயங்களில் பற்றுள்ளங் கொள்ளாராகி விளங்கினார்கள். நாயேனாகிய நான் ஒருவன் மாத்திரம் வாசாஞானம் பேசி இந்த நிலையில்லாக் காயத்தைக் காத்துக்கொண்டிருப்பது என்ன ஆச்சரியம்! கூறுவாயாக என்பதாம்.

(3) இதனால் இனிய இறைவனைக் கண்டுகளிக்கும் நாள் எது என்று இரங்குகிறார்.

கன்னல்—கரும்பு. முக்கனி—மா, பலா, வாழை. ஆரமுது—கிடைத்தற்கரிய அமிர்தம். வாய்மடுப்பது—உண்பது. இங்கே நுகர்தல்.




## உண்மைத் தொண்டு

ஏனைய உயிர்களின் துன்பங்களைப் புறக்கணித்து விட்டுச் சொந்த இன்பங்களை மாத்திரம் தேடிக்கொண்டு திரியும் சுயநல இயற்கை விலங்கினங்கட்கே உண்டு. காரணம் அவைகளிடம் நன்மை தீமைகளைப் பகுத்தறியும் தன்மை இன்மையேயாகும். மக்களிடம் ஆறுவது அறிவாகிய பகுத்தறிவு சிறந்து விளங்குகிறது. இந்தப் பகுத்தறிவு ஒன்றினாலேதான் மனிதன் உலகத்திலுள்ள மற்றை உயிர்களைவிட உயர்ந்தவனாக மதிக்கப்படுகிறான். பகுத்தறிவு விளங்கப் பெறாத மக்கள் மாக்கள் என்றே கருதப் பெறுவர்.

தன்னைப்போலவே பிறரையும் நேசித்தல் மானிட தருமம். சுயநலங் கருதாமல் பிறர் நலம் மாத்திரம் பேணுதல் அறவோர் செயலாகும். கைம்மாறு கருதாமல் பிறர் நலம் பேணுவது என்பது சாமானிய விஷயம் அல்ல. இத்தகைய் அறத்தொண்டு மேற்கொள்ளுகிறவர்களுக்குப் பெரும் தியாகபுத்தி வேண்டும். உலகத்திலேயே தியாகிகள் தலை சிறந்து விளங்கிய பெருமை உடையது நமது பாரத நாடே. ஆனால் தற்காலத்திலோ—நாகரிகம் பெற்ற தேசங்களுக்கு இடையில் ஒரு பைத்தியகார நாடாக விளங்குகிறது.

நமது நாட்டு நாகரிகப் பெருமை, கலைப்பெருமை, மொழிப் பெருமை, சமயப்பெருமை, தத்துவப் பெருமைகள் எல்லாம் இப்பொழுது இருந்த விடம் தெரியவில்லை. இவைகளையெல்லாம் அரும்பாடுபட்டு வளர்த்த தியாகிகள் பெயர்களுங்கூட நாம் தெரிந்துகொள்ள முடியாத நிலைமையில் வாழ்ந்து வருகின்றோம்.

வறுமைநோய் வாரித் தின்றுகொண் டிருக்கும் நாட்டில் நாகரிகம்—முன்னேற்றம் எவ்வாறு இருக்க முடியும்? பல நூற்றாண்டுகளாக நமது நாடு அடிமை வாழ்விலேயே மூழ்கிப் பழகி வந்துவிட்டபடியால் அந்நியர் முற்போக்கைக் கண்டும் அது முன்னேற்றம் அடைய அறிவு செலுத்த முடியாத நிலையில் மயங்கிக்கொண் டிருக்கிறது. வாயளவில் பழம் பெருமை பேசிக்கொண் டிருப்பதற்கு மாத்திரம் நாம் பின் வாங்குகின்றோம் இல்லை. இங்ஙனமே இன்னும் எத்தனை ஆண்டுகள்தான் வெறும் வாய் வீச்சு வீசிக்கொண் டிருப்பது என்று கேட்கின்றோம்?

முற்காலத்தில் அச்சுக்கூடங்கள் இல்லை, பத்திரிகைகள் இல்லை, ரயில்களும் மோட்டார்களும் இல்லை, ஆகாய விமானங்கள் இல்லை. போக்கு வரவு சாதன விஷயத்திலும், பொது ஜனங்களுக்கு அறிவைப் பரப்பும் விஷயத்திலும் தற்கால சௌகரியங்கள் முற்காலத்தில் இல்லாமல் இருந்தும் நமது முன்னோர்கள் தங்கள் தன்னலமற்ற தொண்டின் பெருமையால் அபாரமான காரியங்களைச் சாதித்திருக்கின்றனர். தூரதேசங்களுக்குக் கடல் கடந்து சென்று வியாபாரம் செய்து நமது நாட்டில் பொருள் வளம் செழிக்கச் செய்தனர். அறிவு நூல்களையும் கலைகளையும் வளர்த்தனர். சமய தத்துவங்களை எல்லாம் பிறநாட்டினருக்கு வழங்கினர். சீனதேசத்திலும் ஜப்பான் தேசத்திலும் பௌத்த மதத்தைப் பரவச் செய்ய எத்தனை தியாக மூர்த்திகள்—எத்தகைய தொண்டாற்றி யிருக்க வேண்டும் என்பதைச் சற்றே சிந்தித்துப் பாருங்கள்.

நமது தேசத்தில், தற்காலத்திலுங்கூட, ஒவ்வொரு சமயத்துக்கும் உண்மைத் தொண்டு ஆற்றுவதற்கு என்று எத்தனையோ மடங்கள் இருக்கின்றன. அவை ஒவ்வொன்றிற்கும் ஆண்டுதோறும் ஏராளமான வருவாயுள்ள நிலங்கள் மானியமாக விடப்பட் டிருக்கின்றன. முற்காலத்தில் இவற்றிற் கெல்லாம் சமய உணர்ச்சி உள்ள எத்தனை அன்பர்கள் பொருள் தந்து—நிலங்கள் விட்டு அருந்தொண்டு ஆற்றியிருக்க வேண்டும்! எத்தனை சமயப் போறிஞர் உலக போகங்களை எல்லாம் துறந்து தலைமைதாங்கி மடங்களில் வீற்றிருந்து சமய உண்மைகளைப் பரவச் செய்திருக்க வேண்டும்! இவற்றை யெல்லாம் நினைக்க நினைக்க எமது உள்ளத்தில் உணர்ச்சி ததும்புகின்றது.

அமிழ்தினும் இனிய தமிழ்மொழி வளர்ச்சிக்கு அருந்தொண்டாற்றிய அறிஞரின் தியாகத்தை எம்மொழிகொண்டு எவ்வாறு

புகழ்வது? புலவரின் வறுமையை உலகமெல்லாம் அறியும். எவ்வளவு வறுமையில் வருந்தினாலும்—எத்தகைய இடையூறு நேர்ந்தாலும் பண்டைத் தமிழ்ப்புலவர் தமிழ்மொழி வளர்ச்சியிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்து தொண்டாற்றி வந்த உண்மையை நாம் இன்றுங் கேட்டுவருகின்றோம். முச்சங்க வரலாற்றையும், அவைகளில் வீற்றிருந்த புலவர்களின் பெருமையையும், முடியுடை மூவேந்தரின் தமிழ்மொழிப் பற்றையும், மூவேந்தரோடு குறுநில மன்னர்களும், செல்வரும் தமிழ்ப் புலவர்களை ஆதரித்து வந்த அருமை வரலாறுகளையும் பண்டை இலக்கியங்களின் வாயிலாகக் காணுந்தோறும் எத்தகையாருக்கும் மிகுந்த உருக்கம் உண்டாகும் என்பதில் ஐயம் இல்லை.

பொதுவாக இந்தியாவிலும் சிறப்பாகத் தமிழ்நாட்டிலும் சமய வளர்ச்சிக்காகவும் மொழி—கலைகள் வளர்ச்சிக்காகவும், அரசியல் விஷயத்தில் நீதிநெறியை நிலைநாட்டுவதற்காகவும் தங்கள் தங்கள் ஆயுட் காலங்களையே அர்ப்பணம் செய்த பெரியார்கள் அநேகர். இக்காலத்திலோ மிகவும் கேலிக்கூத்தா யிருக்கின்றது.

சமய உணர்ச்சியை வளர்த்து மக்களுக்கிடையே ஆன்ம விளக்கப் பிரசாரம் செய்யும் பொருட்டுப் புகழ் பொருள் பூசனை பெற்று வந்த பிரிவினர் எல்லாரும் உலகியல் விவகாரங்களையே தங்கள் பிறவிப்பயனாகக் கருதி அவற்றில் நுழைந்து விட்டனர். ஆண்டுதோறும் லட்சக்கணக்கான ரூபாய்கள் வருமானமாகவுள்ள மடாதிபதிகள் எல்லாரும் தங்கள் கடமைகளை அடியோடு மறந்து கோர்ட்டு வழக்குகளிலும், கொலைகளிலும் இறங்கி விட்டனர். மடாதிபதிகள் துறவுக்கோலம் பூண்டவர்கள். ஆனால் தற்காலத்தில் சகல ஆடம்பரங்களும் இவர்களிடத்தேதான் காண்கின்றோம். பெரிய ஜமீன்தார்கள்—குறுநில மன்னர்களுங்கூட இவர்களைப்போல் போக போக்கியங்களோடு வாழ்க்கை நடத்த முடியாது. சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கும் வக்கீல்களுக்கும் விருந்துகள்—மோட்டார்கள்-தாசி வேசிகள்—சதுர் கச்சேரிகள்—சங்கீதங்கள் எல்லாம் ஏக தடபுடல். இந்தச் சுகம் கண்ட இவர்கள் எவ்வாறு சமய வளர்ச்சியையும் மொழி வளர்ச்சியையும் லட்சியம் செய்யப் போகிறார்கள்? வாயில்லாப் பூச்சிகளாகிய பொதுஜனங்களும் மடாதிபதிகள் என்பவர்கள் இப்படித்தான் இருக்கவேண்டும், மடாதிபதிகளின் இலக்கணம் இதுதான் என்று நினைத்துக்கொண் டிருக்கிறார்கள்போ

விருக்கிறது. இல்லாது போனால் தங்களுக்கு உரிமையுள்ள—தங்கள் முன்னோர்கள் மானியமாகக் கொடுத்த பொதுப்பொருள் "ஆற்றிற் கரைத்த புளியாகி" வருவதைக்கண்டு வாளா இருப்பரோ? இந்நாளில் சமயத்தின் உண்மைத் தத்துவங்கள் மறைந்து வெறும் சம்பிரதாயங்களே மிஞ்சி யிருக்கின்றன. இந்தச் சம்பிரதாயங்கள்-வழக்கங்கள் ஒரு சிலர் வயிறு வளர்க்க உபயோக மாகின்றனவே யொழிய மக்களின் இம்மை மறுமை இன்பங்களுக்கு ஒரு சிறிதும் பயன் படுவனவாக இல்லை.

இனி மொழி விஷயத்தை எடுத்துக் கொள்ளுவோம். சமயத்தைப்போலவே தமிழ் மொழியையும் இக்காலத்தில் அலட்சியம் செய்வோர் தொகை நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. "குப்பையுயரக் கோபுரம் தாழ்ந்தது" என்பது போல் ஆங்கிலப் பயிற்சி பெருகப் பெருகத் தமிழ்மொழிப் பயிற்சியும் வளர்ச்சியும் நாளுக்கு நாள் குன்றிக்கொண்டே போகிறது. உயர்தனிச் செம்மொழி என்று அறிஞர் போற்றிப் புகழும் சிறப்புப் பெற்ற நமது பைந்தமிழ் மொழியை எத்தனை பேர் ஆர்வத்தோடு கற்க முன் வருகின்றனர்? அதற்கு அரசினர் எத்தகைய ஆதரவு அளிக்கின்றனர்? என்று நினைத்துப் பார்க்கும்போது யாருக்கும் மனம் உடையாமல் இருக்காது. அறிவு வளர்ச்சிக்கு ஆங்கிலப் பயிற்சி அவசியமே; அதற்காகத் தமிழைப் புறக்கணித்தல் என்ன முறை என்று கேட்கின்றோம்? தாய் மொழிப் பயிற்சியை யன்றோ முதன்மையாகப் பாராட்டிப் பயிலவேண்டும்? அத்தகைய உணர்ச்சியும் ஆதரவும் சௌகரியமும் தமிழ்நாட்டில் சூனியமாயிருக்கின்றமைக்கு மிகவும் வருந்துகின்றோம். தமிழ்மொழியைப் பேணிப் பயிலாதிருக்கின்றமைக்குத் தமிழ் மொழியில் ஒன்றும் இல்லை என்று ஒரு சிலர் வாதிக்க முன் வருகின்றனர்! அது தவறான எண்ணம் என்பது எமது தீர்மானம். உண்மையில் விருப்பம் இருந்தால் எல்லாம் உண்டாகி விடும். நமது தமிழ் மொழி இலக்கிய இலக்கண அமைப்புக்களில் தலை சிறந்து விளங்குவது; இதில் சுவை ததும்பும் காவியங்களும் கதைகளும் ஏராளம்; சமய நூற்களஞ்சிய மாகவும் இலங்குகின்றது. இப்பொழுது நாம் செய்யவேண்டுவ தெல்லாம் காலப் போக்கை அநுசரித்து இலக்கிய வளர்ச்சி செய்ய வேண்டியதே.

முன்னேற்றம் அடைந்திருக்கும் ஒவ்வொரு நாட்டினரும் காலத்துக்கு ஏற்றபடி தங்கள் தங்கள் மொழிகளை வளர்த்து வந்

திருக்கின்றனர். ஆங்கில மொழி இக் காலத்தில் உலக மொழியாக விளங்குவதற்குக் காரணம் என்ன? ஒவ்வொரு பாஷையிலும் உள்ள அரிய பொருள்களைத் தங்கள் பாஷையில் மொழி பெயர்த்துக் கொண்டமையே யன்றோ ? ஏன் நாமும் நமது தமிழ் மொழியை அத்துறையில் வளர்ச்சி செய்யக் கூடாது ? இந்தியாவிலுங் கூட நமது தமிழ்மொழியைத் தவிர மற்ற தெலுங்கு, வங்காளம், ஹிந்தி முதலிய மொழிகள் எல்லாம் எவ்வளவோ முன்னேற்றம் அடைந் திருக்கின்றன.

சிலர் பொருள் ஒன்றையே பிரதானமாகக் கருதி ஆபாசமான பிழைகள் மலிந்த புத்தகங்களை வெளியிட்டு மாணவர்களின் அறிவை யும் சாதாரண மக்கள் அறிவையும் கெடுத்து வருகின்றனர். தமிழ் நாட்டில் ஆங்கிலமும் தமிழும் கற்ற அறிஞர் இல்லையா ? இருக்கின் றனர். இருந்தும் பயன் என்ன ? ஒருவரேனும் தமிழன்னைக்குப் புத்துயிர் அளிக்க முன் வருகின்றார் இல்லை. தமிழணங்குக்கு உண்மைத் தொண்டர் தோன்றித் தொண்டாற்றுங் காலம் எது என்று ஆவலோடு எதிர்பார்க்கின்றோம்.

நமது சமூக விஷயத்தை எடுத்துக் கொண்டால் அதில் உள்ள ஊழல்கள் இவ்வளவு அவ்வளவு என்று வருணிக்க முடியாது. எத் தனையோ வேற்றுமைகள்—பொருளற்ற ஒழுக்க வழக்கங்கள் ஆகிய பேய்களால் அறையப்பட்டு நமது சமூகம் பாதாளத்தில் அழுந்திக் கிடக்கின்றது. ஆங்கிலக் கல்வி காரணமாக எழுந்த உணர்ச்சி விசே ஷத்தால் ஆரம்பத்தில் சில அறிஞர் சமூக சீர்திருத்த விஷயமாக அரிய தொண்டாற்றி யிருக்கின்றனர். அதெல்லாம் நமது நாட்டில் கடலிற் கரைத்த பெருங்காயமாகவே இருக்கின்றது. அதற்குப் பிறகு வந்தவர்கள் சமூக சீர்திருத்தம்— ஆசார சீர்திருத்தம் என்ற பேரால் தங்கள் தங்கள் சுய நலத்தையே சாதித்துக் கொண்டனர்— சாதித்தும் வருகின்றனர். இவர்கள் எல்லாரும் சொல்லொன்று செய லொன்றாக மாறுபட்டு நடந்து மக்களை அலக்கழித்து வருகின்றனர். ஆரிய சமாஜம், பிரம்ம சமாஜம் ஆகியவைகளின் கொள்கைகள் எங்ஙனம் இருந்தபோதிலும் சமூக சீர்திருத்த விஷயத்தில் நல்ல ஊழியம் புரிந்திருக்கின்றன. ஆனால் இன்னும் சண்டை சச்சரவுகள் ஓய்ந்தபாடில்லை.

நமது நாட்டு அரசியல் நிலைமை மிகவும் இழிந்த நிலையிலிருக் கின்றது. அநேக நூற்றாண்டுகளாக இந்தியா அந்நியரின் கொள் ளைக்கும் கொடுங் கோன்மைக்கும் உட்பட்டு வந்திருக்கிறது. இந் தியா சுதந்தர இன்பம் நுகர்ந்த காலம் கனவாகி விட்டது. ஆங்கில ஆட்சி முறையில் சில அநுகூலங்கள் ஏற்பட்டிருந்த போதிலும் ஆண்டு தோறும் கோடிக் கணக்கான திரவியம் கொள்ளை போய்க் கொண்டிருக்கின்றது என்பதை மறுப்பவர் இல்லை; ஆங்கிலேயர்

தங்கள் சுயநலங் கருதியே இந்தியாவை ஆட்சிபுரிந்து வருகின்றனர் என்பது வெள்ளிடை மலை. நம்முடைய மக்கள் அறியாமை, பிணி, வறுமைகளில் மூழ்கித் தத்தளிக்கின்றனர். இந்தக் கொடுமைகளை ஒழிக்கவே காந்தியடிகள் அல்லும் பகலும் திரிகரண சுத்தியாய் உழைத்து வருகிறார். நமது நாட்டுச் சமூக இழிநிலை அரசியல் முன்னேற்றத்துக்கு முட்டுக் கட்டையாய் இருந்து வருகிறது. அநேகர் சமூக சீர்திருத்தத்தின் பேரால் தங்கள் சுயநலத்தைச் சாதித்துக் கொள்ளுவது போலவே தேசீயம்—சுயராஜ்யம், காங்கிரஸ் என்பவைகளின் பேரால் அரசியல் வாதிகள்—தலைவர்கள்—தேசபக்தர்கள் என்போர் தங்கள் தங்கள் சொந்த நலத்தைச் சாதித்துக் கொள்ள அநேக பித்தலாட்டங்களைச் செய்து வருகின்றனர். இதனால் நமது நாட்டு அரசியல் ஸ்தாபனங்கள் எல்லாம் சக்தி அற்றுக் கிடக்கின்றன. அரசியல் விஷயத்தில் உண்மை உணர்ச்சியுடன் தொண்டாற்றுவோர் தொகை மிகவும் அற்பம். பரஸ்பர நம்பிக்கையுடன்—கட்சிப் பிளவுகள் இன்றி எல்லோரும் ஒன்று பட்டு முனைந்து தொண்டாற்றினால் விடுதலை இன்பம் விரைந்து முன்னிற்கும் என்பதில் ஐயம் இல்லை.

சுயநல நோக்கங்கொண்டு எந்த வேஷம் போட்டாலும் வெற்றி ஏற்படாது என்பது உறுதி. கொஞ்ச காலத்துக்கு வேண்டுமானால் சிலரை ஏமாற்றிக்கொண்டிருக்கலாம். ஆனால் எல்லாக் காலத்திலும் எல்லோரையும் ஏமாற்றிவிட முடியாது என்ற உண்மையைப் பொது நலத் தொண்டு ஆற்ற முன் வருவோர் ஒவ்வொருவரும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அத்தகையோர் நிலைமை எவ்வாறு மதிக்கப்படுகிறது என்பதை நாம் அநுபவத்தில் கண்டு வருகிறோம்.

ஆதலால் நமது நாடு பண்டைச் சீரும் சிறப்பும் பெற்று, மக்கள் எல்லோரும் இன்பவாழ்க்கை நடாத்த வேண்டும் என்று விரும்புகின்றவர்கள் எல்லோரும் திரிகாண சுத்தியாய் உழைக்க முன் வருமாறு கேட்டுக் கொள்ளுகிறோம். சமயம், மொழி, சமூகம், அரசியல் விஷயங்களில்—அவ்வத் துறையில் சிறந்து விளங்கும் அறிஞர்கள் தியாகபுத்தியுடன் உண்மைத் தொண்டாற்ற முற்பட்டால் திருவருள் முன்னின்று துணைசெய்யும் என்பதில் அணுவளவும் ஐயம் இல்லை. உண்மைத் தொண்டைத் தவிர மக்கட்குரிய தலைசிறந்த அறம் பிறிதொன்றில்லை என்பதை ஞாபகம் செய்கின்றோம்.

ஓம் தத் ஸத்.



# தமிழ்மொழியின் பெருமை

—(o)—

(பொ. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

*ஏழ்கடல் வைப்பினுந் தன்மணம் வீசி*
*இசைகொண்டு வாழியவே*
*எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி*
*என்றென்றும் வாழியவே*

(பாரதி)

தமிழ் மக்களுக்குத் தங்கள் தாய் பாஷையாகிய தமிழ்மொழியினிடத்து அளவு கடந்த அன்புண்டு. அவ் வன்பின் காரணமாக அவர்கள் தங்கள் மொழியே தரணியில் தலைசிறந்தது என்று சந்தேகமின்றி தைரியமாய்ச் சாற்றுவர். ஆனால் அவர்கள் அங்ஙனம் அறைவதற்கு உரிமை உண்டா? இக் கேள்வி கேட்டால் அவர்கள் தங்களுக்கு உரிமை உண்டென்றும் அவ்வுரிமை உண்மைக்குப் பல ஆதாரங்கள் உளவென்றும் கூறுவர். அவர்கள் காட்டும் ஆதாரங்கள் எல்லாம் இருவகைப்படும். ஒருவகை புராணசம்பந்த மானவை. இரண்டாவது வகை சரித்திர சம்பந்தமானவை. இவ்விருவகை ஆதாரங்களும் உண்மையானவை தாமா; உண்மையானாலும் ஒரு மொழியின் உயர்வை நிலை நாட்டத் தகுந்த ஆற்றல் உடையவை தாமா என்று நாம் ஆராய்ந்தறிதல் அவசியம்.

இதற்கு முன் எழுதிய கட்டுரைகளில் புராண சம்பந்தமான ஆதாரங்களை ஆராய்ந்தோம். அவ் வாராய்ச்சியில் நாம் கண்டு கொண்டதென்ன? புராணக் கூற்றுக்களை உண்மை என்று புகலமுடியாது. அறிஞர் யாவரும் அவற்றை அகற்றிவிடவே செய்வர். உண்மை என்று கொண்டாலும் அவை மொழியின் மாண்பைக் காட்டுமோ என்று கேட்கக் கூடும். இக் கேள்விக்கு ஆம் என்று யாரும் கூற இயலாது.

சரித்திர சம்பந்தமான ஆதாரங்களில் வெகு முக்கிய மானவை ஆறு. அவை உண்மையாயிருக்கலாம். முதலில் அவை உண்மைதானா என்று ஆராய்வோம். பின்னர் அவற்றைக் கொண்டு அன்னை மொழியின் அருமையை ஆராய்வோம்.

சரித்திர ஆதாரங்களில் முதலாவதாக வுள்ளது தமிழ் தோன்றிய காலத் தொன்மை. அதற்குரிய சில குறிப்புகளை சென்ற மாதம் தந்தோம். தமிழின் பழமையைக் குறித்துத் தமிழ நூல்கள் கூறும் விஷயங்களை மொழிந்து விட்டேன். இப்பொழுது சம்ஸ்கிருத நூல்கள் கூறுபவற்றைக் கவனிப்போம்.

## ரிக்வேதம்

நான் முன்னால் கூறியபடி ரிக்வேதம் உலகிலுள்ள நூல்களில் எல்லாம் மிகப் பழமையான தாகும். அதில் கூறப்பட்டிருக்கும் ஆதிகால மனிதர்கள் தமிழ் மக்களாகிய திராவிடர்களையே குறிக்கும் என்றும், அந்த ஜனங்கள் அக் காலத்திலேயே பெரிய நகரங்கள், அரண்மனைகள், கோட்டை கொத்தளங் கள், குளங்கள், ஏரிகள், வீடுகள், ஆபரணங்கள் அரசியல் முறைகள் பல நாக ரிகச் சின்னங்கள் படைத்திருந்தனர் என்றும் ஓல்ட்ஹாம், ஹாவல் முதலிய ஐரோப்பிய ஆசிரியர்களைத் தழுவி ஆசிரியர் சேஷய்யங்கார் தாம் எழுதியுள்ள "திராவிட இந்தியா" என்னும் ஆங்கில நூலில் கூறுகின்றார். மேற்கூறிய நாகரிகச் சின்னங்கள் தமிழர்கள் ரிக்வேத காலத்திலேயே உடையவர்களாய் இருந்திருப்பரேல், நாகரிகச் சின்னங்களில் முதற்பட்டது என்று கூற வேண்டிய பாஷையையும் உடையவர்களாய் இருந்தனர் என்று கூறுவது பிசகாகாது.

## இராமாயணம்

இராமாயணத்தை வடமொழியில் முதல் முதல் இயற்றியவர் வான்மீகி முனிவராவர். அவர் கதாநாயகனாகிய இராமர் இருந்த காலத்திலேயே வாழ்ந்தவர் என்றும் கூறப்படுகின்றது. ஆகையால் அவர் தம் நூலில் கூறும் விஷயங்கள் அவர்காலத்து அவர் அறிந்தவைகளே யாகும். அவர் காலமோ கி. மு. 3000 வருஷங்களுக்கு முன் அதாவது இற்றைக்கு 5000 வருஷங் கட்கு முன் என்று காப்டன் டிராயர் கூறுகின்றார்.

அங்ஙனம் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன இருந்த வான்மீகி முனிவர் தமது இராமசரிதையில் சுக்கிரீவன் வானரசேனைகளைச் சீதையைத்தேட விடும்பொழுது அச்சேனைகள் தெற்கே போய் தேடவேண்டிய தேசங்களை யும் நகரங்களையும் குறிப்பிட்டபொழுது சேரசோழபாண்டிய நாடுகளையும் தாம்பிரவர்ணி நதியையும் அந்நதி கடலில் கலக்கு மிடத்தில் பாண்டியன் ராஜதானிப் பட்டணமாயிருந்த மணிமுத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட கபாடபுரம் என்னும் நகரத்தையும் வர்ணித்துக் கூறியதாகப் பாடியிருக்கின் றார். ஆகையால் தமிழ்நாடும் அதன்கண் வழங்கிய தமிழ்மொழியும் 5000-வரு ஷங்களுக்கு முன்னரேயே மிகச் சிறப்போடு இருந்து வந்தன என்பது போதரும்.

இறையனார் அகப்பொருள் இடைச்சங்கம் கபாடபுரத் திருந்தது என் றும் அது நிலவியிருந்த காலம் 3700-வருஷங்கள் என்றும் கூறுவதைக் கண்டோம். அதாவது கபாடபுரத்துச் சங்கம் இருந்தது இற்றைக்குச் சுமார் 7500-வருஷங்களுக்கு முன் முதல் சுமார் 3700-வருஷங்களுக்கு முன்வரை யாகும். ஆகையால் வான்மீகி 5000-வருஷங்களுக்கு முன்னிருந் தவர் கபாடபுரத்தை வர்ணித்திருப்பது நம்பத்தக்கதாக இருக்கின்றது என்று கூறப்படும்.

இங்ஙனம் இராமாயண காலமாகிய 5-ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்ன ரேயே தமிழ்நாடு மிக நாகரிக முற்றதாய் இருந்திருக்குமானால் அதன்கண் பயின்றுவந்த பாஷை பல்லாயிர வருஷங்களுக்கு முன்னரேயே முளைத் திருக்கவேண்டு மன்றோ?

## மகாபாரதம்

பாரதப்போர் நடந்தகாலம் கி. மு. 3000-க்கு முன் என்று மாக்ஸ் டங்கர் முதலிய பண்டிதரும், கி. மு. 1194-ல் என்று சில பண்டிதரும் கூறுகின்றனர். குறைந்த காலத்தையே ஏற்றுக்கொண்டாலும் இற்றைக்குச் சுமார் 3200-வருஷங்களுக்கு முன்னர் பாரத யுத்தம் நடந்தது என்று கூறலாம்.

அந்த யுத்தத்தையும் அதற்குக் காரணமாயிருந்த பல சம்பவங்களையும் கூறும் மகாபாரதம் என்னும் நூலில் தமிழ்மொழியைப் பற்றிய பிரஸ்தாபம் காணப்படுகின்றதா என்று பார்ப்போம். பாண்டியதேசத்து மன்னனாகிய மலயத்துவசனுடைய மகளாகிய சித்திராங்கதையை அர்ச்சுனன் மணந்திருந்ததாக அந்நூல் கூறுகிறது. இராஜ சூய யாகத்திற்கு முன் பாண்டவர்களால் செய்யப்பட்ட திக் விஜயத்தின் பொழுது சகாதேவன் பாண்டிய நாடு வந்து பாண்டியனிடம் பல கப்பப் பொருள்கள் வாங்கியதாகக் காணப்படுகின்றது. சோழ பாண்டிய மன்னர்கள் இராஜ சூய யாகத்திற்கு சந்தனத் தைலம் முதலிய பல சரக்குகள் கொண்டுபோய்க் கொடுத்ததாகவும் அறிகின்றோம். பாஞ்சாலியின் சுயம்வரத்திற்குப் போயிருந்த மன்னர்களில் பாண்டிய அரசனும் ஒருவனுவன்.

பஞ்ச பாண்டவர் காலத்தில் தமிழ்வேந்தனாகிய பாண்டியன் மிகச்சிறப் புற்றிருந்தான் என்பதும் அவன் அரசாண்டு வந்த தேசம் மிகச்செழிப்புற்றும் நாகரிக மடைந்தும் இருந்தது என்பதும் வட மொழி மகா பாரதத்தில் மட்டுமே காணப்படுகின்றதென்பதில்லை. தமிழ் நூல்களிலும் அவ்விஷயம் கூறப்பட்டிருப்பதைக் காண்க. முரஞ்சியூர் முடி நாகராயர் என்னும் சங்கப் புலவர்,

> நின்கடற் பிறந்த ஞாயிறுபெயர்த்து நின்
> வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
> யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருந!
> வான வரம்பினை நீயோ பெரும
> வலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ
> நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
> யீரைம்பதின்மரும் பொருதுகளத் தொழியப்
> பெருஞ் சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்!

(பாண்டவர் ஐவருடன் துரியோதனர் முதலிய நூற்றுவரும் போர் புரிந்து படைக்களத்தில மாண்டுபோம் வரையும் மிக்க உணவை இருசேனைக்கும் வரையாது வழங்கினேய்) என்று பாண்டியன் உதியன் சேரலாதனைப் புகழ்ந்து பாடியிருக்கின்றூர். ஆகவே இதிலிருந்தும் தமிழ்மொழி தோன்றிய காலம் மிகப் பழமையானது என்பது பெறப்படும்.

(தொடரும்.)




# காளத்தி வேடனும், கங்கை வேடனும்.

———(o)———

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.)

தமிழ்மணங் கமழும் தென்னாட்டில், கண்களைக் கவரும் வனப்பு வாய்ந்தது காளத்திமலை விளங்குவ தாகும். அம்மலையில் கல்லதிரச் சென்று கருமந்தி விளையாடும். இளமானும், பைங்கிளியும் இனிய தினை கொள்ளும். குளிர் சந்தின் தளிர் தின்று வேழமும் பிடியும் விரும்பித் திரியும். குன்றக் குறவரைக்கண்டு அரியினமும் கரியினமும் அஞ்சி யோடும். குறிஞ்சிக் குறவர் எழுப்பும் இரும்புகை மஞ்சினைச் சேர்ந்து கொஞ்சிக் குலாவும். இத்தகைய காளத்திமலையில் திண்ணன் என்னும் இயற்பெயர் வாய்ந்த வேடன் ஒருவன் வாழ்ந்து வந்தான்.

வடநாட்டில் களியன்னமும் மட அன்னமும் களித்து விளையாடும் அழகு வாய்ந்தது கங்கைக்கரை யாகும். அக்கரையில் மோதும் தெள்ளிய அலைகள் தென்றல் வீசும். அவ்வாற்றி லமைந்த கஞ்சங்களில் கார்வண்டுகள் துஞ்சும். மாகந்தமும் மகரந்தமும் எங்கும் நிரம்பி நிற்கும். குவளை மலர்கள் கண்போல் மலர்ந்து மிளிரும். இத்தகைய அழகுவாய்ந்த கங்கைக் கரையில் ஆயிரம் நாவாய்க்கு நாயகனாய்க் குகன் என்னும் வேடன் வாழ்ந்துவந்தான்.

கலைமலிந்த கண்ணப்பன் என்று கற்றறிந்தோர் போற்றும் திண்ணன் காளத்தி நாதன்பால் இடையறாப் பேரன்பு வாய்ந்து விளங்கினான். அப் பெருமானது கண்ணோய் கண்டு, கரைந்து, தன் கண்ணையும் இடந்தளித்துக் கண்ணப்பன் என்று பெயர் பெற்றான். இவ்வாறே கங்கைக் கரையின் காவலனாய குகன், அஞ்சனமேனி வாய்ந்த இராமன் பால் இறவாத இன்ப அன்பமைந்து விளங்கினான். அப்பெருமான் அன்னையின் ஆணையை மேற்கொண்டு சடைமுடியும் மரவுரியும்புனைந்து கானகத்தில் அலைந்த நிலையை நினைந்து நெஞ்சம் குழைந்தான். பிறர்க்கென வாழும் பெற்றி வாய்ந்த அப் பெருந் தகையைக் காக்குமாறு தன்னுயிரையும் இழக்க இசைந்தான்.

இவ்வாறு கனிந்த அன்பு வாய்ந்த காளத்தி வேடனையும், கங்கை வேடனையும் குறிக்கோளாகக்கொண்டு, இறைவனை நினைந்துருகிய அன்பர் நிலை ஆராய்ந்தறியத் தக்கதாகும். அன்பைப் பெருக்கி இன்பப் பேறடையக் கருதிய ஆன்றோர் இவ்விரு அடியாரது எல்லையற்ற அன்பின் பெருக்கை நினைந்து, அகம் உருகிக் கண்ணீர் உகுத்தார்கள்.

முற்றத்துறந்த பட்டினத்தடிகள் என்று தமிழகம் போற்றிப் புகழும் பெரியார், கண்ணப்பனது அருஞ்செயலை நினைந்து கரையும் தன்மை

கற்போர் மனத்தைக் கவர்வதாகும். காளத்திமலையிலமர்ந்த காளகண்டனுக்கு ஆளாகக் கருதிய அடிகள்

"வாளால் மகவரிந்து ஊட்ட வல்லேன் அல்லேன் மாதுசொன்ன
சூளால் இளமை துறக்க வல்லேன் அல்லேன் தொண்டுசெய்து
நாளாறில் கண்ணிடந்து அப்பவல்லே னல்லேன் நான் இனிச்சென்று
ஆளாவ தெப்படியோ, திருக்காளத்தி அப்பருக்கே"

என்று மனம் குழைந்தார். மழலைதேரு இளம் பாலனை வாளாலரிந்து இறைவனுக்கு இன்னமுதூட்ட வல்லேனல்லேன். திருநீலகண்டன் மேல் வைத்த ஆணை கடவாது, இளமையிலேயே ஐம்பொறிகளை வென்று, இன்பம் துறக்க வல்லேனல்லேன். ஆறுநாள் பழகிய பான்மையில் ஆராத அன்புவாய்ந்து, கண்ணைப் பறித்து, இறைவனது கண்களில் அப்பவல்லேனல்லேன்; இத்தகைய ஏழையாய யானும், மெய்யடியார் போல் நடித்து, வீடகத்தே புகுந்திட விழைகின்றேன்" என்று உள்ளத் துறவமைந்த உயரிய அடிகள் உருகுவா ராயினர். கடந்தோர்க்கும் கடத்தலரிதாய மக்கட் பாசம் நீத்த ஒரு தொண்டர் பெரிய சிறுத்தொண்டராய்ப் பேறு பெற்றார். மனையாள் மீது வைத்த பாசம் துறந்த மற்றொரு தொண்டர், இறைவனது அன்பிற்குரிய ராயினர். கண்ணிற் சிறந்த உறுப்பில்லை யென்றறிந்தும், ஈசன்பால் வைத்த நேசத்தால், இருகண்களையும் ஈர்த்தளிக்க இசைந்த ஒரு தொண்டர், மாறிலா இன்பத்தில் மகிழ்ந்தார். இவ்வாறு அகம்புறமென்னும் இருவகைப் பற்றையும் அறவே களைந்து, இறைவன்பால் அன்பை வளர்த்த அடியாரது நிலையை நினைந்து, பட்டினத் தடிகள் வருந்தும் பான்மை அறிந்து போற்றத் தக்கதாகும்.

காளத்தி வேடனைக் குறிக்கோளாகக் கொண்டு அடிகள் கரைந்துருகிய தன்மை போல், கங்கை வேடனை இலக்காகக் கொண்டு, வானர வேந்தனாய சுக்கிரீவன் வாடி வருந்தினன். இருமையும் தரும் பெருமானாய இராமனிடம் எப்பயனையும் கருதாது, விழுமிய அன்பு பூண்ட வேடனது பெருமையையும் தனது சிறுமையையும் நினைந்து சுக்கிரீவன், சிந்தை தளர்ந்தான். வானர சேனை இலங்கைமா நகர்ப்புறம் எய்தியபோது, மாற்றாரது படைவலியை யறியுமாறு, தன்னகரில் நின்று நோக்கிய இலங்கை வேந்தனைக் கண்டபோது வானர மன்னனது உள்ளத்தில் சீற்றம் பொங்கி யெழுந்தது. பஞ்சின் மெல்லடிப் பாவையை வஞ்சனையாற் கவர்ந்து, சிறைவைத்த, அரக்கர் கோனைக் கண்டபொழுது, பிறந்த பெருங்கோபத்தால், வானர மன்னன் அவன் மீது பாய்ந்தான். வீரராய இருவரும் நெடும்பொழுது கடும்போர் விளைத்தார்கள். இலங்கை நாதனது அளவிறந்த வலிமையை அறிந்த வானரத் தலைவன், மாற்றரசனை வெல்ல இயலாது, அவன் தலைமீதிருந்த மணி முடிகவர்ந்து, மீண்டும் இராமனது பாசறையில் வந்தடைந்தான். காலனுக்கும் காலனா யமைந்த காவலனது கையினின்றும், தப்பிவந்த வானர வீரனைக் கண்டு, இராமன் களிகூர்ந்தான். அந்நிலையில் அன்பினால் அகங் குழைந்த வானர மன்னன், ஐயனை நோக்கி,

"காட்டிலே கழுகின் வேந்தன் செய்தன காட்டமாட்டேன்
நாட்டிலே குகனார் செய்த நன்மையை நயக்க மாட்டேன்
கேட்டிலேன் இன்று கண்டும், கிளிமொழி மாதராளை
மீட்டிலேன் தலைகள் பத்தும் கொணர்ந்திலேன் வெறுங்கை வந்தேன்"

என்று மனம் வருந்தி மொழிந்தான். "அந்தோ! காட்டில் வாழ்ந்த கழுகின்

வேந்தனும், நாட்டில் வாழ்ந்த நல் வேடனும், செலுத்திய அன்பை, நான் செலுத்த இயலாதவனாயினேன். இலங்கைமா நகரில் சிறையிருந்த சோகத் தாளாய நங்கையைக் கண்டும், அன்னையை இங்கு கொண்டுவர வலியற்று வாளா கண்டு வந்தேன்! நல்லோர்க்கு இடர் விளைக்கும் அரக்கனை எதிர்த்தும், அவன் சிரங்களைக் கொய்து கொணராது வெறுங்கையாய் வந்தேன்'' என்று வானர மன்னன் வருந்தினான்.

காட்டிலே கழுகின்வேந்தன் ஆற்றியகடமையையும், நாட்டிலே கங்கை வேடன் ஆற்றிய நன்மையையும், அறிவோமாயின் வானர வீரனது சொல்லின் பொருள் இனிது விளங்குவதாகும். கானகத்தில் தனியளாயிருந்த தையலை, இலங்கை வேந்தன் வஞ்சனையாற் கவர்ந்து, வாயுவேகமாய்ச் செல்லும் பொழுது, ஆதரவற்று அரற்றிய மங்கையின் அழுகுரல் கேட்டு, கழுகின் காவலன் காற்றினும் கடுகிப் போந்தான். அறநெறி யறியாத அரக்கர் கோனுடன் நெடும் பொழுது கடும்போர் புரிந்து ஆவி துறந்தான். இவ்வாறு சரண் புகுந்த சீதைக்காக, அறப்போர் புரிந்து ஆவி நீத்த கழுகின்வேந்தன் 'தெய்வமரணம்' எய்தினான் என்று இராமன் போற்றிப் புகழ்ந்தான். 'தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு' வென்று சொல்லின் செல்வனாய அநுமன் புகழ்ந்துரைத்தான். அரன் வாளுடையானை, அலகுடையான் வெல்லுதல் இயலா தென்றறிந்தும், அறநெறிதிறம்பிய அரக்கனொடு பொருது, ஆவி துறத்தலே, தன் கடமை யென்றுணர்ந்து கழுகின்வேந்தன் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டான். இவ்வாறு இராமனது சேவையில், அமர் புரிந்து, இறக்கவும் இயலாத தனது முறைமையை நினைந்து வானர வீரன் வருந்தினான்.

இனிக் கங்கைக் கரையின் காவலனாய குகன் பரதனது பரந்த சேனையைக் கண்டபோது, அவன் தமையனை வெல்லக் கருதிவந்தான் என்று தவறாக எண்ணி, தன்னுயிரையும் ஒரு பொருளாகக் கருதாது போர்க் கோலம் புனைந்து,

" ஆழ நெடுந்திரை யாறுகடந்திவர் போவாரோ,
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ
தோழமை யென்றவர் சொல்லிய சொல் ஒரு சொல்லன்றோ
ஏழைமைவேடன் இறந்திலன் என்றெனை யேசாரோ''

என்று வீரமொழி பகர்ந்து, நண்பனுக்காக உயிரையும் கொடுக்க இசைந்து நின்றான். என் காவலில் அமைந்த கங்கை யாற்றைக் கடந்து இவர் போவாரோ? தோழமை யென்று நாயகன் உரைத்த சொல் ஒரு சொல்லன்றோ? நன்றி மறவாத நாய்போல், நண்பனது ஆணைக்கடங்கி, கங்கைக் கரையைக் காவல்புரியும் ஏழை அமர்க்களத்தில் இறந்த பின்னல்லவோ, பரதன் இராமனைப் பார்க்கவேண்டும் என்று குகன் கூறிய மொழிகளில் தலையாய அன்பு தழைத்திலங்கக் காணலாம். இவ்வாறு நாட்டிலே குகனார் செய்த நன்மையையும் செய்ய வியலாத தனது சிறுமையை நினைந்து சுக்கிரீவன் வருந்தினான்.

ஆகவே காளத்தி வேடனும் கங்கை வேடனும் அன்பு நெறியில் ஒப்பாரின்றி உயர்வுற்று ஏனைய அன்பர்க்கு ஓர் கலங்கரை விளக்கமாக அமைந்திலங்கும் தன்மை இனிது விளங்கும்.

# ஆனந்த சந்திரோதயம்

தமிழாசிரியர் S. V. வரதராஜையங்கார்.

"புத்திமான் புரிய வேண்டிய வேலை" உலகில் ஜன்ம மெடுத்த ஒவ்வொருவரும் வாழ்க்கை யென்னும் போராட்டத்தில் வீரர்களாய்த் திகழ்ந்து, தத்தம் வலிமைக்கும் திறமைக்கும் ஏற்ப பலாபலன்களை யடைகிறார்கள். ஆனால் ஏகோபிதமாக யாவரும் அடையவிரும்புவது ஒன்று. அதுவே விடுதலை. அறிஞர்கள் அற்பமான விடுதலையை விடுதலையென்று கருதுகிறதில்லை. சரீரத்தினிடத்தில் அகப்பட்டுக்கொண்டு அது ஏவும் வேலைகளனைத்தையும் புரிந்து நிற்கும் ஆத்மாவானது, புனரபி ஜனனம் புனரபி மரணம் என்னும் ஜனன மரண ஹேதுவான அச்சரீர சம்பந்தத்திலிருந்து விடுபடவேண்டு மென்றே மகான்கள் பாடுபடுகிறார்கள். வாழ்நாள் வழியடைக்கும் கல்லை அவர்கள் விடாதுபற்ற முயல்கின்றனர். அதற்குச் செய்ய வேண்டிய சாதன மென்ன? அதுவே ஆத்ம விசாரம். விசார மில்லாத விடத்து விஷயம் விளங்குகிறதில்லை. சாதன மில்லாத விடத்து சாத்யம் ஏற்படுவதில்லை. ஆதலின் ஆத்மவிசாரமே விடுதலையாகிய மோக்ஷத்திற்குச் சாதனமாகும். ஆத்மா இன்னதென்றும் அனாத்மா இன்னதென்றும் அறிய வேண்டியதே முதற்படியான காரியம். 'நான்' என்பது சரீரத்தைக் குறிக்கவில்லை யென்றும், ஆத்மாவையே குறிக்கிற தென்றும் முதலில் அறிதல் வேண்டும். அஃதறிந்த பின் அனாத்மாவாகிய தேகத்தினிடத்தில் கொண்டிருக்கும் அபிமானத்தை நாளடைவில் கண்டித்து வரவேண்டும். உடனுக்குடன் ஆத்மாவின் தன்மையைப் பற்றி விசாரணை செய்து வரவேண்டும். ஆத்மா அழிவற்றதென்பதில் எந்த மதஸ்தருக்கும் ஆக்ஷேபனையில்லை. "கடவுள் உண்டா?" என்றால் இல்லை யென்று சிலர் கூறுவர். "உலகம் மெய்யா? பொய்யா?" என்பதில் பற்பல சமயத்தவரும் வெவ்வேறு விதமாக வாக்குவாதம் புரிவார்கள். 'பிரம்ம நிச்சயத்தைப்பற்றியும் பலவிதமாக வாதிப்பவர்கள் உண்டு. எது எப்படியாயினும் தானுண்டா? என்பதில் எவருக்கும் எவ்வித ஐயப்பாடும் கிடையாது. விடுதலையின் பொருட்டு விசாரம் செய்ய ஆரம்பிக்கின்ற காலத்திலேயே கராரற்றதும் பலரும் வாதிக்க முற்படுவதுமான தத்துவங்களை உபதேசிப்பது அனர்த்தத்திற் கொண்டுபோய் விட்டுவிடு மென்பதுபற்றியே, ஸ்ரீமத் சங்கரர் எந்தக் கொள்கையில் சகல மதஸ்தரும் ஐக்கியப்பட் டிருக்கிறார்களோ அதை முதற்படியாக உணர்த்தினார். தன்னைப் பற்றி முதலில் விசாரிக்கத் தொடங்குகிறவனுக்கு சகல பரதத்துவ விஷயங்களும் நாளடைவில் விசாரத்தின் பலத்தால் விளக்கமாக, அவன் பெரிய வேதாந்தியாகி, 'அகம் பிரம்மாஸ்மி' என்று அறிந்து கொள்ளுகின்றான்; தானே எங்கும் வியாபித்திருக்கும் பிரம்மமென்று அறிந்து கொள்ளுகிறான்.

# முப்பொருளுண்மை.

—:○:—

## 3 உலகம்.

உறுபொருளெவையும் உள்ளகத் தடக்கி
கருவுருவாக்கும் கண்ணகன் உலகே!
நின்வயின் உதித்து நின்வயின் ஒடுங்கும்
பன்முறை பிறப்பும், பன்முறை யிறப்பும்,
5. தோன்றின கெடுதலும், தோன்றா வுறுதலும்,
காண்பவர் மயக்கோ? காரண முளதோ?
நீயே பலவாய் நிறைந்து நின்றனையோ?
நின்னிடத் தொருவன் நிரம்பியுள் உளனோ?
நீயிலாதவனும் அவனிலா நீயும்
10. தனித் தொரு முதலாய் தங்கல் கண்டிலனே! அதனால்
எண்ணரும் உலகத்தியற்கை யாவும்
முன்னாள் தொடங்கி இந்நாள் வரையும்
நண்ணரும் வெளியில் நலிதலும், தோன்றலும்,
முறையே நடப்பன முடிவொன்றின்றி.
15. எப்பொருளாய் நீ இசைந்துருக் கொள்ளினும்
அப்பொருள் தனிலும் அவனன்றி அசையும்
முதன்மை நினக்கோ முற்றுமா றில்லை.
காரண காரியம் இரண்டையும் கடந்த
ஆரணம் அலறும் அருள்பொழி யண்ணல்
வைத்தவா றென்றும் வாழிய நீயே!

தொண்டைமான் முத்தையன், திருநெல்வேலி.

# "கம்பர் கவி இன்பம்"

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

## "கடவுள் வணக்கமும், நூற்பயனும்"

"உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும்,
நிலைபெறுத்தலும், நீக்கலும், நீங்கலா
அலகிலா விளையாட் டுடையார் அவர்
தலைவர்: அன்னவர்க்கே சரண் நாங்களே"

திருவளர் செல்வன் இராமபிரானது சீரியகதையைப் பயிலுந்தோறும் இன்பம் பயக்கும் தேனினுமினிய தீஞ்சுவை வாய்ந்த பாவடிவில், செந்தமிழ் மொழியில் அமைக்கப்புகுந்த கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் பெருமான், தாம் பாடத்தொடங்கிய நூல் இனிது முடிதற்பொருட்டு முதுமரபிற்கேற்ப முதலில், இக்காவியத்திற்கு ஏற்புடைக்கடவுளும் தமது வழிபடுகடவுளுமாகிய முத்தொழில் நடாத்தும் முழுமுதற் பொருளாம் முகுந்தனை அரும்பொருள் பொதிந்த இவ்வழகிய கவியால் வாழ்த்துவாராயினர். "நாம் வாழும் இம்மண்ணுலகு ஒன்றுமட்டு மன்றி, எண்ணிலாத அண்டங்கள் ஏனைய பலவற்றையும் தோற்றுவித்தலும் அவ்வாறு படைத்தவற்றைக் காத்து நிலைப்பித்தலும் அவ்வாறு காத்தவற்றை அழிப்பித்தலும் அவ்வாறு ஒடுக்கப்பட்டவற்றை மீண்டும் ஆக்கி அளித்து அழித்தலுமாக, முத்தொழில்களையும் என்ஞான்றும் எவ்விடத்திலும் ஓய்விலாத முடிவற்ற திருவிளையாடலாகச் செய்யுந் தன்மை உடையவர் எவரோ, அவரே எல்லா உலகுகட்கும் தனிப்பெருந் தலைவராவர். அவர் ஒருவரையன்றி வேறு புகல் ஏதுமின்மையால், அத்தலைவர்க்கே நாங்கள் அடைக்கலம்"—என்பது இக்கவியின் கருத்தாகும். அண்டங்கள் பற்பலவாக விளங்குகின்றன. அவையனைத்தும் தனது அருள் நோக்கினால் ஆண்டவனால் அமைக்கப்பட்டனவே; அவ்வாறு தோற்றுவித்தவைகளைக் காத்தருள்பவனும் அவனே; அவற்றை இறுதியில் ஒடுக்குபவனும் அவனே. என்னே இறைவனின் அற்புதத் திருவிளையாட்டு இருந்தவாறு! சிறு குழந்தைகள் சிந்தை மகிழ்ச்சியோடு தெருக்களில் சிற்றில் இழைக்கின்றன; அவற்றைப் பெருவிருப்புடன் பேணிக்காத்து பலவாறு விளையாடிக் களிக்கின்றன; பொழுது போனபின் அவற்றைக் கால்களான் சிதைத்துப் பழையபடியே மண்ணோடு மண்ணாய்ச்செய்து ஓடிப்போய் விடுகின்றன. ஆயினும், மறுநாளும் மீண்டும் அவ்வண்ணமே விளையாட்டைச்செய்து அகம் மகிழ்கின்றன. ஆண்டவனும் அத்தகைய விளையாட்டுக் குழந்தையேபோல் விளங்குகின்றான். ஆனால், குழந்தையின் விளையாட்டு சில மாதங்கட்கே; இறைவனின் விளையாட்டோ எல்லையில்லாததாகவும் ஓய்வற்றதாகவும் இனிது நடைபெற்று வரு

இன்றது. படைக்கும் தொழிலின் பொருட்டுப் பங்கயத்து அயனாகவும், காத்தல் தொழிலுக்கென்று கார்வண்ணத் திருமாலாகவும், அழிக்குந் தொழிலுக்கென அரனாகவும் தன்னொருவனையே இறைவன் மும்மூர்த்திகளாகப் பிரித்துக்கொண்டு உலகை நடாத்தி வருகின்றான். ஆண்டவனுக்கு படைத்தல் காத்தல் அழித்தல் எனும் முத்தொழில்களும் சிறிதளவும் சிரமமின்றி மிக்க எளிதில் நடாத்தக்கூடியன வாகவும், அவனது சிந்தைக்கு இனியனவாகவும் இருத்தலின், அவற்றை 'விளையாட்டு' என்றார். மனித ஆராய்ச்சிக்கு எட்டாவாறு, அளவிட்டுரைக்க முடியாத காலத்திலிருந்தே அவை நித்தியமாக நிகழ்வன வாதலின், 'நீங்கலா' என்றார். 'நீங்கலா அலகிலா விளையாட்டு' என்பதற்கு, முத்தொழில்கள் நீங்கலாக அளவிறந்த வேறு விளையாட்டுகளையும் உடையவர் என்றும் சிலர் பொருளுரைப்பர். ஆண்டவனது அருட்பெருந் தொழில்கள் பலவும் ஐவகைப் பகுப்புள் அடங்குமென ஆன்றோர் அளவிட்டு உரைத்திருப்பதால், 'அலகிலா' என்பதற்கு 'அளவில்லாத' எனும் பொருள் கொள்வதைக் காட்டிலும் 'முடிவில்லாத' எனும் பொருள் கொள்வதே சாலச் சிறப்புடைத்து. இறைவனது தொழில்கள் பல வகைப்பட்டன வாயினும், அவையனைத்தும் ஆக்கல் அளித்தல் அழித்தல் அந்தர்யாமியா யிருத்தல் அநுக்கிரகித்தல் எனும் ஐவகைப் பகுப்புள் அடங்கி விடுவனவேயாம்; பின்னிரண்டும் அளிக்குந் தொழிலில் அடங்கி விடுவனவாம். எனவே, மூவகைத் தொழில்களாம் விளையாட்டுகளை ஓய்வின்றி ஆற்றி வருபவர் எவரோ, அவரே எறும்பு முதல் எண் கண்ணன் ஈறாக உள்ள அனைவர்க்கும் தனிப்பெருந் தலைவர் ஆவர். அத்தகைய ஒப்புயர்வற்ற ஒருவர்க்கே அடியோங்கள் அடைக்கலம் என்பார் 'அன்னவர்க்கே சரண் நாங்களே' என்றார். சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினராய மானிடரைச் சரண்புகுவது ஆன்ம உய்வுக்கான எத்தகைய நன்மையையும் எய்துவிக்காததலாலும், அவரால் அடையும் இம்மை நலங்களும் விரைவில் அழிந்து படும் இயல்பினவாதலோடே, பிறவிப் பெருங்கடலைக் கடக்கத் துணை செய்யாது அவாவைப் பெருக்கி சம்சாரசாகரத்திலேயே ஆழ்ந்து வருந்திக் கிடக்கச் செய்து விடுவனவு மாதலாலும் இறைவனைச் சரண மடைவதே ஆருயிரை உய்விப்பதாகுமென கம்பர் பெருமான் அறிவுறுத்திய நயத்தை, ஊன்றிநோக்க உள்ளத்திற்கு உண்மை இனிது புலனாகும்.

> "என்னாவது எத்தனை நாளைக்குப் புலவீர்காள்!
> மன்னா மனிதரைப் பாடிப் படைக்கும் பெரும்பொருள்
> மின்னார் மணிமுடி விண்ணவர் தாதையைப் பாடினால்,
> தன்னாகவே கொண்டு சன்மம் செய்யாமையும் கொள்ளுமே"

எனும் ஆழ்வாரது அருள்மொழி ஈண்டு உணரத்தக்கது.

'மாம் ஏகம் சரணம் வ்ரஜ' ('என்னொருவனையே சரணமாகப் பற்றுக') என்ற ஸ்ரீ கீதாசார்யன் அருளிச் செய்தவாறே வேறு உபாயங்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு இறைவன் ஒருவனையே உண்மை யன்போடு சரணமடையும் ஒவ்வொருவரும், எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபட்டு அழிவற்ற பேரின்பம் துய்ப்பது திண்ணம். 'நாங்கள்' என பன்மையிற் கூறியதால், இராமபிரானது திவ்ய சரித்திரக்கடலில் ஆடவிரும்பும் அனைவரையும் சேர்த்துக் கூறினார் என்க. 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வைய

கம்'—என்பதன்றோ ஆன்றோரது அருட்பெரு நோக்கமாகும்! இராம கதையைத் திருவருள் துணைகொண்டு பாடத்தொடங்கிய கம்பர் பெருமான், 'உலகம்' என்று தொடங்கியது, 'எல்லா நூல்களிலும் மங்கலமொழியை முதலில் அமைத்தல் வேண்டும்' எனும் இலக்கண நெறிக்கிணங்க என்ப. மற்றும், உலகவாழ்வுக்கு வேண்டப்படும் அரும்பொருள்கள் அனைத்தும் 'கம்பராமாயண'த்தில் பொதிந்து கிடப்பது பற்றியும், 'உலகம்' எனும் மங்கல மொழியை அமைத்தார் என்றுங் கூறலாம். வேண்டுவார் வேண்டுவன வற்றை விருப்போடு அளிக்கும் விண்ணுலகத் தருவை ஒப்ப, கம்பராமாயணம் உல கத்தினர்க்கு பல விதத்திலும் பெருந்துணை புரிந்து நிற்கும் மண்ணுலகத் தருவாக விளங்கி வருகின்றது என்பதை விளம்பவும் வேண்டுமோ? பல திறப்பட்ட மனப்பான்மையுடைய கதாபாத்திரர்கள் வாயிலாக, 'தக்க இன்ன தகாதன இன்ன என்று' எவருக்கும் இனிது உணர்த்தி நன்னெறி பற்றி ஒழுகுமாறு அவரைத் தூண்டுவது கம்பரது காவியம் என்பது பலரும் அறிந்ததொன்றே; ஆயின், தாம் உணர்ந்தவற்றைச் செயலில் கொண்டு வருவோரோ மிக அரியர்.

> நாடிய பொருள் கைகூடும்; ஞானமும் புகழும் உண்டாம்;
> வீ(டு) இயல் வழியது ஆக்கும்; வேரி அங்கமலை நோக்கும்;
> நீடிய அரக்கர் சேனை நீறுபட்(டு) அழிய வாகை
> சூடிய சிலை இராமன் தோள்வலி கூறுவோர்க்கே.

திருவளர் செல்வன் இராமபிரானது திவ்ய சரித்ராம்ருதத்தைப் பருகு வோர் அடையும் நலங்களை கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் பெருமான், நூலைத்தொடங்கு முன் எடுத்து விளக்குவாராயினர். அறத்திற்குப் புறம் பான செயல்களையே மேற்கொண்டு, எங்கணும் சென்று வெற்றி பெற்றோ மெனும் செருக்கு மிகுந்து, படைவலியின் துணைகொண்டு இறுமாந்து வாழ்ந்து வந்த அரக்கரது பெருஞ்சேனை முற்றும் அழிந்து படுமாறு அமர் செய்து வெற்றிமாலை சூடிய வீரகோதண்டம் ஏந்திய வேந்தர் வேந்தனை இராமபிரானது திருத்தோள்களின் மாண்பைப் புகழ்ந்து பாடுவோர், விரும் பிய நற்பொருள்களைப் பெற்று இன்பம் துய்ப்பர் என்பது இக்கவியின் கருத்தாகும். 'நாடிய பொருள்' என்பது கொண்டு மனம் விரும்பிய பொருள்கள் எவையும்—அவை அறத்திற்குப் புறம்பானவையே யாயினும்— கைகூடும் என்று பொருள் கொள்வது பெரும் பேதைமையாம். மனத்திற்கு அடிமைப்பட்டு அதனை அடக்கியாள இயலாத மாக்கள், பல திறப்பட்ட பொருள்களில் அவாமிகுந்தவராய் அமைதியற்று அலையா நிற்பர்; அத்தகை யோர் நாடும் பொருள்கள் அளவிலடங்காதனவாம். "ஒரு பொழுதும் வாழ்வ தறியார், கருதுப—கோடியும் அல்லபிற"—என்றார் நாயனாரும். அத்தகை யோர் நாடிநிற்கும் பொருள்கள் எவ்வளவுக் கெவ்வளவு கைகூடி வருமோ, அவ்வளவுக் கவ்வளவு அவாது அலாவே வளர்ந்தோங்கும். உள்ளத்தில் திருப்தி கொள்ளாத உள்ளத்திற்கு அமைதி ஏற்படுவதேது? ஆதலின், மனத் திற்குத் தாம் அடிமைப்பட்டிராமல் மனத்தைத் தமக்கு அடிமைப்படுத்தி அடக்கி ஆளும் ஆன்றோர் நாடும் சீரிய பொருள்களே, இராமபிரானது வீரத் தோள்களின் புகழைப் பாடுவோர்க்கு இனிது கைகூடும் என்க. அறத்தின் மூர்த்தியாம் இராமபிரானது ஆன்ம சக்தியை—தெய்விக வீரத்தை—அருள்

கனிந்த செயல்களை மெய்யன்போடு ஓதுவோர் உள்ளத்தில், அறத்திற்கு மாறுபட்ட தீயவிருப்பங்கள் தோன்றுவது யாங்ஙனம்? தனது எல்லையில் சீர்ப் பெருமையையும் எண்ணாது, மக்கட் குலத்தின்பாற் கொண்ட இரக்க மிகுதியால் மானிடசாதியிற் பிறந்து படாதனபட்டு மக்களைத் திருத்தி உய்விக்கத் திருவுள்ளம் பற்றிய இராமபிரானது அருட்பெருங் கதையை உண்மை யன்போடு படிக்கத்தொடங்கி அவ்வானந்தத்தில் ஆழ்ந்து விடுவோர் அகத்திலே, 'இராமபிரான் நடந்து காட்டிய நன்னெறியே பின்பற்றி நடந்தாற்றான், நாம் மனிதராய்ப் பிறந்ததன் பயனைப் பெற்றவராவோம்'—எனும் நினைவு தோன்றுதல் இயல்பே யன்றோ! மனித வாழ்க்கைக்கே தனிப்பெரும் இலக்கியமாக அமைந்த இராமபிரானது வரலாற்றைச் சிறந்த வழிகாட்டியாகக்கொண்டு இல்வாழ்வு நடாத்த விரும்பும் மெய்யன்பர் ஒவ்வொருவருக்கும், அவர் விரும்பும் நற்பொருள்கள் பலவும் ஆண்டவன் அருளால் இனிது கைகூடும் என்பது உறுதி. இது பற்றியே, "தெய்வத்தால் ஆகாதெனினும், முயற்சிதன்-மெய்வருந்தக் கூலிதரும்"; "குடிசெய்வ லென்னும் ஒருவற்குத் தெய்வம்—மடிதற்றுத் தான் முந்துறும்."—எனும் பொன்மொழிகள் எழுந்தன. ஆகலின், சீதாபதியின் சீர்மையைப் புகழ்வோர்க்கு, அவர்கள் நாடும் உயிர்க்கு உறுதிபயக்கும் உண்மைப் பொருள்களே இனிது கைகூடும் என்ப.

'பொருள்' என பொதுவாகக் கூறப்பட்டிருத்தலின், ஆன்ம உய்வுக்கேற்ற சிறந்த நற்றுணையாகிய மெய்க்கல்விப் பொருளும், அறநெறிக்குத் துணை செய்வதற்கான நற்செல்வப் பொருளும் என அதனை இரு கூறுகப் பிரிக்கலாம். தோண்டத் தோண்ட மேலும் சுரந்து பெருகிவரும் இனிய ஊற்று நீரை ஒத்து, பிறர்க்கு அளிக்கப்படுவதால் குறைந்துவிடாது மேன்மேலும் வளர்வதும், இவ்வொரு பிறவியில் மட்டுமின்றி எழுமையிலும் தொடர்ந்து பற்றி உயிரை உய்விப்பதும், அறிவை விரிவாக்கி ஆண்டவனது திருவருளைப் பெற்றுய்யப் பெருந்துணையாய் நிற்பதும், என்றும் அழியாததுமான மெய்க்கல்விப் பொருளும், அக்கல்விப் பொருளை அடைவதற்கு ஒரு வகையில் உதவியாய் நிற்பதும், மெய்யன்பு மிகுந்து நல்லறம் புரிந்திடுவதற்கு ஏற்ற துணையாவதும், "பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை; அருளில்லார்க்கு—அவ் வுலகம் இல்லாதியாங்கு"—என்றவாறு இலௌகிக வாழ்வில் இன்றியமையாது வேண்டப்படுவதூஉமாகிய நல்வழியில் வரும் செல்வப் பொருளும் இராமன் கீர்த்தியை இயம்புவதால் இனிது கைகூடும் என்ப. எனினும், இராமன் புகழை இயம்புவதாக புத்தகத்தைப் படிக்கு மளவில் நின்று விட்டால், செல்வப்பொருளும் தாமே வலிந்து வந்தெய்துவனவாமோ? அவ்விரு பொருளையும் சேகரிக்கத் தளராத ஊக்கத்தோடு உழைக்கும் நன்முயற்சிக்கே, இராமபிரானது இன்னருள் பெருந்துணையாய் நிற்கு மென்பது ஈண்டு கவனிக்கற் பாலது. 'நாடிய' எனும் அடைமொழியால், 'அவ்விரு நற்பொருள்களையும் பெற்று மகிழ்வதிற் பெருவிருப்பங் கொண்டு அதற்கேற்ற நன் முயற்சியில் தலைப்பட்டால்'—எனும் பொருள் நன்கு விளங்கக் கிடத்தல் காண்க.

உள்ள ஒன்றை இல்லாததாகவும் இல்லாத ஒன்றை உள்ளதாகவும் கொண்டு மயங்கிக் கிடப்பதும், நீர்மேற் குமிழ்போல் நிலையற்ற பொருள்களை என்றும் அழியாது நிலைத்து நிற்கும் இயல்புடையன என்று கருதி, அவற்றின்

மேற பெரு மோகங்கொண்டு மயங்கிக் கிடப்பதும், இம்மை இன்பம் ஒன்றையே விரும்பி, மறுமையைப் பற்றிச் சிறிதும் கவலையுறாது செருக்குற்றுக் கிடப்பதும் இன்னோரன்ன பிறவும் அஞ்ஞானத்தின்பாற் பட்டனவாகும். ஆகலின், சிந்தையைக் கவரும் இனிய திவ்ய சரித்திர வாயிலாக, உயிர்க்கு உறுதிபயக்கும் உயரிய உண்மைப் பொருள்களை மருந்தை வெல்லத்தில் மறைத்து வைத்து ஊட்டுவதேபோல் தெள்ளிதில் விளக்கிக் காட்டி அஞ்ஞானத்தை அகற்றி ஆருயிரை உய்விப்பதும் இராமபிரானது சீரிய கதையே யன்றோ! அக் கதையைப் பயில்வதால், உள்ளத் தெளிவாகிய உண்மை யறிவு உண்டாவது உறுதியே அல்லவா? மற்றும், மாநிலத்தில் மானிடப் பிறவி தாங்கிய ஒவ்வொருவரும் நற்புகழ் உடையராதல் வேண்டும். பிறந்து வளர்ந்து எப்புகழும் பெறாது மறைந்தொழியும் மனிதர், புழுப்போன்றோரே யென்னத் தடையென்னை? "தோன்றில் புகழொடு தோன்றுக; அஃதிலார்— தோன்றலின் தோன்றாமை நன்று"—என்றார் பெருநாவலரும். ஆயின், நமது மாண்பைக் கண்டு நம்மிட மிருந்து எத்தகைய பயனையும் எதிர்பாராத வேனையோர் நம்மைப் புகழ்ந்து பேசுவது புகழேயன்றி, நமது தயவைப் பெரிதும் விரும்பி நிற்போர் நம்மைப் புகழ்வது உண்மைப் புகழாகாது. மற்றும், 'பிறர் தம்மைப் புகழவேண்டும்' என்பதையே பெருநோக்காகக் கொண்டு வினையாற்றுவதும், தம்மைத் தாமே புகழ்ந்துகொள்வதும் மெய்ப்புகழை அளியா. மெய்ப்புகழாளர் தம்மைப் பிறர் புகழ்வதைச் சிறிதும் விரும்பார்; சிந்தையிற் செருக்குச் சிறிதுங் கொள்ளார். அவர் விரும்பாமலே அவரைப் பெரும் புகழ்தானே அடைகின்றது. இத்தகைய சீரிய புகழுக்கு இலக்கியமாக இலங்குவது, இந்நாளில் காந்தி யடிகள் எய்தியுள்ள புகழாகும். இராமகதையைப் படிப்போர்க்கு தொன்று தொட்டு ஜன சமூகத்தில் தனிப்புகழ் உண்டு; அதனை இக்காலத்தும் காணலாம். படிககு மளவில் நின்றுவிடாது, இராமபிரானது சீரிய வாழ்க்கையைக் கூடியவரை பின்பற்றியதாக தமது வாழ்வு முறையை அமைத்துக்கொள்ள முயன்றிடும் மெய்யன்பர்கள், நாளடைவில் ஒழுக்கத்திற் சிறந்த உத்தமர்களாகி வேனையோரால் பெரிதும் மதிக்கப்பட்டு பெரும் புகழ் பெறுவர். 'ஞானமும் புகழும் உண்டாம்' என்றதால், 'கல்விப்பொருள் கைகூடுவதால் அகத்தெளிவாகிய மெய்ஞானமும், செல்வப்பொருள் நல்வழியிற் பெறுவதால் நற்புகழும் உண்டாகும்' எனும் உண்மை விளங்கக் கம்பர் பெருமான் உணர்த்தியுள்ள நயத்தை உன்னுந் தோறும் உன்னுந்தோறும் உவகை பொங்குகின்றது.

'வீடியல் வழியதாக்கும் வேரி அம் கமலை நோக்கும்'—என்றதால், முத்தியை அடைவதற் கேற்ற வழியைச் செய்யும் மலர்மகளது திருவருளையும் இராம கதையைப் பரதியோடு பயில்வோர் பெற்றுய்வர் என்பது விளங்கும். அறியாமையின் பயனாக, பல திறப்பட்ட பிழைகளைச் செய்வோர் பால் ஆண்டவன் கொண்டிடும் சினத்தைத் தணித்து அவர்பால் திருவுள்ளம் இரங்கியருளுமாறு செய்விக்கும் கைம்மாறற்ற தனிப்பெருங் கருணையுடைய உலக அன்னையாதலின், திருமகளை 'வீடு இயல்வழி அது ஆக்கும் வேரி அம் கமலை' என்றார். புதல்வனின் பிழைகளைப் பொறுத்தருள்வதில், அத்தனைக் காட்டிலும் அன்னையே யன்றோ தனி சிறந்தவள்! 'அம்மா' என ஆர்வத்தோடு அழைத்து அன்னையிடம் நெருங்குவதேபோல், எவ்வேளையிலும் தடையின்றித் தந்தையிடம் நெருங்க முடிகின்றதா? மகனிடத்தில் தாய் வைக்கும் அன்பு தனி அன்புதான்; தந்தைவைக்கும் அன்பு அதனினும் ஒருபடி

குறைந்ததே. எத்துணைப் பிழைகள் இழைத்திடினும், மகனை அன்னை மன மார வெறுத்துப் புறக்கணித்துத் தள்ளிவிட முடிவதில்லை; தந்தையோ அவனைத் தக்கவாறு தண்டித்துத் திருத்தவே முயல்கின்றான். அந்நிலையில், மகனுக்காகப் பரிந்துபேசி அவனது பிழைகளைப் பொறுத்தருளச் செய்வித்து அவனை உய்விப்பவள் அன்னையே யன்றோ! அது பற்றியே யன்றோ, ஜகன் மாதாவான திருமாமகளை முன்னிட்டுக் கொண்டே சர்வேச்வரனான திரு நாராயணன் திருவடிகளில் மெய்யன்பர்கள் அடைக்கலம் புகுகின்றனர்! பிராட்டியின் திருவருள் இன்றேல், பிரானது கருணைக்கு இலக்காதல் எவ் வாற்றானும் அரிதே! சானகியாரைச் சரணம் புகுந்ததால், மன்னிக்கத்தகாத பெருங் குற்றத்தைச் செய்திருந்தும் காகம் உயிர்பெற்றது; பிராட்டியாரது சீற்றத்திற் காளானதால், பெருவலி உடையவனாயிருந்தும் இராவணன் இறந்துபட நேர்ந்தது. 'சிறையிருந்த கற்புக்கரசியின் ஏற்றத்தைச் சொல் லும்' சீரிய கதையாகிய இராமாயணத்தை, மெய்யன்போடு பயில்வோர்க்கு வையந்தாயாகிய வைதேகியின் திருவருள் உண்டாகும் என்பதையும், அத னால் பெறுதற்கு அரிய அழிவில பெரும்பதமாகிய வீட்டின்பமும் இனிது கைகூடும் என்பதையும் நூலின் தொடக்கத்திலேயே கம்பர் பெருமான் அறிவுறுத்தியிருப்பதை ஒவ்வொருவரும் தமது உள்ளத்திற் பசுமரத்தாணி யெனப் பதியவைத்துக் கொள்வாராக. இனி, கல்விப்பொருளைப் பெறுவ தால் மெய்யறிவு பெற்று முத்தி அடைவதற்கேற்ற வழியைப் பின்பற்றி நடந்து உய்யலாம் எனவும்; செல்வப் பொருளைப் பெறுவதனால் இலக்குமி யின் கருணைக்கு இலக்காகி உய்யலாம் எனவும் கொண்டு ஞானத்தால் முத்தி யின்பமும் புகழால் லக்ஷ்மீ கடாட்சமும் உண்டாகுமென உரைப்பினும் பொருந்துமாறு கம்பர் அமைத்துள்ள நயத்தை என்னென வியப்பது?

'நீடிய அரக்கர் சேனை நீறுபட்டு அழிய வாகை சூடிய சிலை'—என்பதால், நல்லறத்திற்குப் புறம்பான வழியிலேயே வாழ்வு நடாத்துவோர் எவ்வளவு தான் வலியராயினும்—இழுக்கத்தையோர் அறவே அழிந்து படுதல் உறுதி என்பது விளக்கப்பட்டது. 'நீடிய அரக்கர் சேனை' என்பதால், ஏனை யோரால் எதிர்க்கப்பட்டு வெல்லப்படுமென எண்ணவும் இயலாவாறு ஆற்ற லிலும் அளவிலும் மிகுந்த சேனை யென்பது குறிக்கப்பட்டது. 'எதிர்த்து நிற்போர் எவ்வுலகத்திலும் எவருமின்றி, இமையவரும் பணிகேட்ப இறுமாந்து கிடந்த எண்ணிறந்த அரக்கரும் மண்ணொடு மண்ணாய் மடிந்து சாம்பராகப் போராடி வெற்றிகொண்ட வீரத்தோணடம்' என்பதைக் குறிப்பிப்பான் வேண்டி 'நீறுபட்டழிய வாகை சூடிய சிலை' என்றார். ஆன்ம சக்தியின் அளவிடற்கரிய ஆற்றலின் முன்பு, மிருகசக்தி வாய்ந்த எதிர்ப்பு என்னாகும்? இதிலிருந்து, என்றென்றும் 'அறமே வெற்றிபெற்று உயர்ந்து நிற்கும்; பாவம் தோல்வியே எய்தி அழிந்துபடும்'—எனும் பேருண்மை இனிது விளங்கக் கிடக்கின்றது. இதுவே இராமாயணத்தின் திரண்ட பொருளாகும். அறத் தோடு இயைந்த நன்னெறி பின்பற்றி நடாத்தும் அன்பு வாழ்வொன்றினா லேயே மெய்யின்பம் விளையும்; அறத்திற்கு மாறுபட்ட புன்னெறி பின்பற்றி நடாத்தும் வாழ்வால் வரும இன்பூட்டுவனவாகத் தோன்றுவன வெல்லாம் இறுதியில் பெருந்துன்பத்தையே விளைவிக்கும். முன்னைய வாழ்வே அழியா மெய்ப்புகழ் அளிப்பது; பின்னைய வாழ்வால வரும் புகழோ அழிந்துபடும் புன்மை வாய்ந்ததேயாம். இதுபற்றியே வள்ளுவரும் "அறத்தால வருவதே இன்பம்; மற்றெல்லாம்—புறதத புகழுமில"—என்றார்.

மேற்கூறிய கல்விப்பொருளும் செல்வப்பொருளும் மெய்ஞ்ஞானமும் நற்புகழும் அழிவில் வீட்டின்பமும் அன்னை திருமகளின் அருளும் எவர்கட்கு வாய்க்குமெனில், வீரராகவனது வீரத்தோள்களின் மாண்பை மெய்யன்போடு புகழ்ந்து பாடுவோர்களே அவையனைத்தும் இனிது வந்தெய்தப் பெறுவர் என்பார், 'இராமன் தோள்வலி கூறுவோர்களே' என்றார். ஈண்டு கவனிக்கத் தக்கதொன்று உண்டு. இராமபிரானது திருத்தோள்களின் வலியைப் புகழ்ந்து பாடுவோர்க்கே, அப்பயன்கள் அனைத்தும் உண்டாகுமெனக் கம்பர் பெருமான் பாடியதேன்? இராமபிரானது திருமுகமேனும் திருவடிகளே னும் ஏனைய திருவவயவங்களேனும் முதலிற் கம்பர் கருத்தைக் கவர்ந்தன வில்லை; அப் பெருமானது வீரத்தோள்களே நமது கவிச் சக்கரவர்த்தியின் கருத்திற் புகுந்து அவரை ஆட்கொண்டன. ஆடவராய்ப் பிறந்தவர்கட்கு தோள்வலியே இன்றியமையாததாகலின், ஆடவர் வாழ்க்கைக்குச் சிறந்த ஒப்புயர்வற்ற இலக்கியபுருடனாக அவதரித்த புருடோத்தமனான இராமபிரான் தோளாற்றலில் தன்னை ஒத்தாரும் மிக்காரும் இன்றி சிறந்து விளங்கினான். தோளாற்றல் இல்லாத ஒருவன், தன்னை எதிர்த்தாரைச் செருக்கடக்கி ஒடுக்கலும் தன்னை நம்பியவர்களது இடுக்கண்களைக் களைந்தாக உறுதி உரைத்தலும் யாங்ஙனம்? தன்னைச் சரணடைந்தோர்க்கு 'அஞ்சல்' என்று அருளி, அவரது இடுக்கண்களைக் களைதற்குப் போதிய ஆற்றல், தோள்வலியற்ற ஒருவனுக்கு ஏது? தன்னை எதிர்த்தோர் மிகப் பலராயினும், தானொருவனே நின்று சற்றும் தளர்வுறாது போராடி அவரனைவரையும் அழிக்கும் போராற்றல், கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவனாகிய நமது இராமபிரானிடத்தி லன்றோ பெரிதும் பொலிகின்றது! அத்தகைய வீரர்திலகமாகிய அவ்வேந்தர் பெருமானது வீரத் தோள்களின் மாண்பைப் புகழ்ந்து பாடுவது, நமது இடுக்கண்கள் பலவற்றையும் போக்கிவிடுமென்பதில் ஐயமும் உண்டோ! மேலும் தாடகைவதை தொடங்கி இராவணவதை இறுதியாக இராமாயண காப்பிய முழுவதிலும், இராமனது தோள்வலியே அன்றோ பரக்க உரைக்கப்பட்டுளது! வீரர் அனைவர்க்கும் சிறந்த இலக்கிய வீரவேந்தனாகவன்றோ, 'கம்பராமன்' காட்சியளிக்கின்றான்! அத்தகைய சீரிய வீரனது வரலாற்றைப் படிக்குந் தோறும் படிக்குந் தோறும், நமக்கும் அத்தகைய வீரவாழ்வில் ஆர்வம் பிறக்கின்றதன்றோ! வீரராகவனது வெற்றி பொருந்திய செயல்கள் நிரம்பிய வீரகாவியமாகிய கம்பராமாயணத்தை மெய்யன்போடு படிப்போர் எய்தும் பயன்களை, நூற்பயன் நுவலும் இக்கவி வாயிலாக கம்பர் பெருமான் சுருக்கிச் சொல்லி விளங்க வைத்துள்ளார். இச் சீரிய பாவிற் பொதிந்து கிடக்கும் பொருள்களை, இன்னும் விரித்துரைக்கப் புகுவோமாயின் மிகப் பெருகிச் செல்லும். இதனை ஆராய்ச்சிக் கண்கொண்டு நோக்க நோக்க, பல சிறப்புற்ற அரும்பொருள்கள் அகத்திற்குப் புலனாகி ஆனந்தம் ஊட்டும். சிறந்த கவிஞர்பெருமான் ஒருவரது செஞ்சொற் கவியின்பத்தை, அவரது நூலின் தொடக்கத்திலேயே கண்டு களிக்கக்கூடும் என்பதற்கு இவ்விரு பாக்களும் சிறந்த சான்றுகளாகும்.

---

# பெரியார் வணக்கம்.

கோலாப்-விசாகபட்டினம்-டாக்டர். சுந்தரம்.

பெரியார் வணக்கத்தில் முற்பட்டதும் தலைமை சான்றதும் இந்தியா. ஆதிகாலந்தொடங்கி இன்றுவரை புகழோடு காலஞ்சென்ற பெரியார்களுக்கு மக்கள் காலத்துக்குத் தக்கவாறு வணக்கத்தையும் மரியாதையையுஞ் செலுத்தும் வழக்கம் இங்கே இருந்துவருகிறது.

மனிதர்களுக்குள் எழுத்துப் பிறப்பதற்கு முன், மனவலி, உடல் வலி, ஆயுதப் பயிற்சி முதலியவைகளில் சிறந்து விளங்கிய சிலர்கள் பெரியவர்களாகக் கருதப்பட்டார்கள். எழுத்துக்கள் பிறந்து மொழிகள் விருத்தியானவுடன், கல்வி யறிவு, கடவுள் வழிபாடு, அறவழி நிற்றல், தவயோகம் ஆகியவைகளில் சிறந்து விளங்கிய சிலர்கள் பெரியார்களாகக் கருதப்பட்டு வணங்கப் பெற்றார்கள்.

இப்பெரியார் வணக்கம் ஒவ்வொரு நாட்டிலும், மக்களுக்கிடையே காணப்படுகிறது. வெளிநாட்டு மக்கள் தங்கள் தங்கள் பெரியார்களுக்குத் தகுந்த வணக்கம் செய்து வந்தார்களென்பதும் சரித்திர வாயிலாகத் தெரிகிறோம். ஐரோப்பியர்கள் தங்கள் பெரியார்களுக்குச் செலுத்திய வணக்கத்துக்கும், இந்திய மக்கள் தங்கள் பெரியார்களுக்குச் செலுத்திய வணக்கத்துக்கும் உள்ள ஒரு சிறிது வேற்றுமை ஊன்றிப்பார்த்தால் புலனாகும்.

மொழிகள் ஒலிவடிவாயிருந்தபோது, பெண்களோடும், பிள்ளைகளோடும், ஆடு மாடுகளோடும், தண்ணீரும் புல்லும், தகுந்த விளை நிலமும் காணப்பட்ட இடங்களில் கும்பல் கும்பலாக வாழ்ந்து வந்த ஆதிமனிதர்கள் தங்கள் தங்களுக்கு மத்தியில் தோன்றிய பெரியார்களுக்கு அப்பெரியாருடைய அழகு, வீரச்செயல் முதலியவைகளை இசைப்பாட்டுகளாக அமைத்து ஆண்களும் பெண்களும் அவைகளைப்பாடி வணக்கஞ் செய்து வந்தார்கள். புலங்களில் தொழில் செய்யும்போதும், இதர சமயங்களிலும் இவ்விசைப்பாட்டுக்களைப்பாடி வந்தார்கள். அவை பெரியும் வாய்ப்பாடமாக இவ்விசைப் பாட்டுக்கள் அவர்கள் சந்ததியாருக்கும் கற்றுக் கொடுக்கப்பட்டுவந்தன. இதன் உண்மை விசாக பட்டினம் ஜில்லாவைச் சேர்ந்த கீழமலைத் தொடர்ச்சியில் வாழ்ந்து வருகிற 'காண்ட்ஸ்,' என்கிற ஆதிகுலத்தாருக்குள் விளங்குகிறது. எழுத்துப் படிப்புத் தெரியாத இக் கூட்டத்தார், ஆண்களும் பெண்களும் இத்தகைய இசைப்பாட்டுக்களைப் பாடக்கேட்கலாம்.

சில பெரியார்களுக்குச் சில பிரிவினர் அப்பெரியாரை அடக்கம் பண்ணப்பட்ட புதைகுழியின் மேல், எவருக்குஞ் செய்யாத ஓர் பெருஞ்சிறப்பினைச் செய்து வணக்கத்தைச் செலுத்தினார்கள். காலத்துக்கேற்ப ஓர் சிறு கல்லினை அப்புதை குழியின்மேல் ஞாபகார்த்தமாக நட்டு வைத்தார்கள். அல்லது ஓர் சிறிய கட்டடத்தைக் கட்டிவைத்தார்கள் (சமாதி என்று இக்

காலத்தில் வழங்குகிறது). அன்றியும் சிறுவிழாக்களும் செய்து வந்தார்கள் (குருபூஜை என்று சில இடங்களில் சொல்லப் படுகிறது.)

மனிதர்களுக்குள் அறிவு வளர்ச்சியானகாலத்து, கற்களினால் அப்பெரியார்களைப்போல உருவங்களைச் செய்து முக்கியமான இடங்களில் நிறுத்தியும் சிறிய ஆலயங்கள் கட்டியும் வணக்கம் செலுத்தி வந்தார்கள். (மதுரை மீனாக்ஷி ஆலயதக்கு வட புறமாகக் காணப்படும் மதுரை வீரன் கோவில்—திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள பொதியை மலையின்மேலுள்ள பட்டவராயர் கோயில்.)

இன்னும் சிலர் சில பெரியார்களின் உருவங்களையும், அவர்கள் வீரச் செயல்களையும் கற்களிலும், குகைகளிலும் தீட்டி வந்தார்கள் (கிஷ்கிந்தா என்னும் ஹம்பியிலுள்ள ஜைன மதப்பெரியார்களின் குகைகளிலும் மற்றும் எல்லோரா முதலிய குகைகளிலும் இத்தகையவை காணப்படுகின்றன).

மனிதர்களுக்குள் எழுத்துப்பிறந்து மொழிவிருத்தி யடைந்தவுடன் கற்றவர்களில் சிலர் தங்கள் பெரியார் வணக்கத்தை நூல்கள் மூலமாகச்செலுத்த முயன்றனர். ஆனால் பெரியார் வணக்கத்தை நினைத்து நூல் எழுதப் புகவில்லை. கல்வியின் முதிர்வால் எழுதப் புகுந்த அக்கட்டுரையாளர்கள் மிகவும் பெரியார்களின் வணக்கத்தில், தங்களை அறியாமலே ஈடுபட்டார்கள்.

அங்ஙனமே முதல் முதல் புராணங்களும் இதிகாசங்களும் எழுதப் புகுந்த ஆசிரியர்களுக்கு ஆதாரமாகவும், முதல் நூலாகவும் இருந்தவைகள் வாய்ப்பாடமாகத் தொன்று தொட்டுவந்த பெரியார்களின் கீர்த்தி நிறைந்த இவ்விசைப்பாட்டுக்களே. கர்ண பரம்பரையாக நிலவி வருகிறவைகளையும், வாய்ப்பாடமாக வந்த இசைப் பாட்டுக்களையும் ஆதாரமாகவைத்து, "ரவி காணாததைக் கவி காணுவான்" என்னும் முதுமொழிக்கேற்ப ஆசிரியர்கள் நூல் நூற்க ஆரம்பித்தார்கள். அங்ஙனம் ஆரம்பித்தவர்கள், காப்பியதலைவன், தலைவி, இவர்களுக்குச் செய்யவேண்டிய முறைமைக்கு மிகுதியாய், அவர்கள் பாலுள்ள அன்பினாலோ பக்தியினாலோ, பேதமையினாலோ அளவுகடந்து ஈடுபட்டு, கல்வியின் முதிர்ச்சியால், கற்பனைகளை வரையறையின்றிக் கலந்து நூற்களை யெழுதி முடித்தார்கள்.

கற்பனைகளைக் கலந்தது மன்றி, தலைவன் தலைவிகளுக்குத் தெய்வீகத் தன்மையையும் கொடுத்துச் சில ஆசிரியர்கள் நூற்களை எழுதி விட்டார்கள். பெரியார் வணக்கத்தில் ஈடுபட்டவர்களுக்குத் தாங்கள் வணங்கித் துதிக்கும் பெரியாரிடத்தே காணப்படும் அற்பச் செயல்களும், சம்பவங்களும், நடைகளும், விசேஷமான பொருளுடனும் கருத்துடனும் தோன்றுவது இயற்கையே.

தாம் செய்த நூற்கள் நன்கு மதிக்கப்படும் பொருட்டும், சில ஆசிரியர்கள் அந்நூற்களை, சிவன் சொன்னதாகவும், நந்தி சொன்னதாகவும், சுப்பிரமணியர் சொன்னதாகவும் வரைந்து நூர்களை வெளிப்படுத்தினார்கள்.

கல்வி முதிர்ச்சியால் சில பெயர்களைக் கற்பித்து விசேஷ சம்பவங்களையும் அற்புதச் செயல்களையும் ஏற்றிச் சில நூல்களை வரைந்து விட்டார்கள். (மயிலிராவணன். ஜீவகன். அல்லி.)

பரிசில் கருதிப்போலும்—சில ஆசிரியர்கள் புகழுரைகளை எல்லை கடந்து எழுதிவிட்டார்கள். சில சம்பவங்களின் உண்மையை ஆராய்ச்சி செய்யாது, கேட்டதைக் கேட்டவாறே, உண்மையென நம்பி வரைந்தனர் ஆசிரி

யர். பெரியார் சொல்லைக்கேட்டு முழு நம்பிக்கையோடு எதிர் வினவாமல் கீழ்ப்படியும் புராண காலமானதால், சிலகற்றறிந்த ஆசிரியர்களும் சில உண்மைகளையும் கட்டுரைகளையும் ஆராய்ச்சி செய்யாமல் அவ்வாறே வரைந்து விட்டனர்.

தென்னிந்தியாவில் நிலவி வருகிற சில புராணங்களும் கதைகளும் பெரியார் வணக்கத்தைப் பெரும்பாலும் தழுவியுள்ளன என்று துணியலாம். ஏனைய நாட்டுச் சரித்திரங்களோடும் வரலாறுகளோடும் ஒப்பிட்டு மனவேற்றுமையின்றி உண்மையாய் விசாரித்தால் இவ்வுண்மை விளங்கும்.

இக்காலத்திலும் கற்றுணர்ந்த சில பெரியார்கள், தாமாக நினைக்கவும், தனி நூற்கள் செய்யவும் நினைப்பின்றி முன்காலத்திய சில பெரியார்களின் நூலிலும் கவிச்சுவை முதலியவைகளிலும் அளவு கடந்து ஈடுபட்டுக் கரையேற வகை யறியாது ஆழ்ந்திருக்கிறார்கள். உண்மையினை ஆராய்ச்சி செய்யாமல் கட்டுரைகளில் ஆழ்ந்து வந்தார்கள்.

பெரியார் வணக்கத்தின் சார்பாக எழுந்த புராணங்களும் கட்டுரைகளும் இந்தியர்களுக்கு அநேக நன்மைகள் பயந்தனவாயினும் சில இடையூறுகளும் உண்டாகாமலிருக்கவில்லை.

கவிகளின் கற்பனைகளினின்றும், புகழுரைகளினின்றும் உண்மையாக நடந்த சம்பவங்கள் எவை, கற்பிதங்கள் எவை என்று வேறுபாடு காண்பது உண்மை ஆராய்ச்சியுடையோர்க்கு அன்றி மற்ற சாதாரண மனிதர்களுக்கு விளங்காமற் போயிற்று. விளங்காமற்போகவே சில கட்டுரைகளிலும், சம்பவங்களிலும் அநேகர் ஈடுபட்டு விட்டார்கள்.

உண்மையான தேச சரித்திரம்-வரலாறுகள் கிடைப்பது மிகவும் அரிதாயிருக்கிறது. உண்மையை விசாரிக்கப் புகுந்தோறும் மதப்பற்று தேசப்பற்று ஆகியவைகளில் சிறிது ஈடுபட்டு விடுகிறார்கள்.

காலங்கருதிச் சொன்ன கட்டுரைகள் எவை, நீதிகளை நிரூபிக்க எழுந்த கட்டுரைகள் எவை, அபிமானம் அல்லது பற்றின் சார்பாகச் சொன்னவை எவை, பெரியார் வணக்கத்தில் சொன்னவை எவையென்று விசாரிப்பார் சிலர்களே என்று துணியலாம். ஏனையமதங்களின் கட்டுரைகளோடும், மொழிகளோடும், சம்பவங்களோடும் ஒப்பிட்டுப் பார்த்து விசாரியாமல், பற்றின் சார்பாய், தன்மொழியையும், சமயத்தையும், கட்டுரைகளையும், கொள்கைகளையும் போற்றிப் புகழ்ந்து கொள்கின்றனர். தமிழ் மொழியானது கம்பரோடும் திருவள்ளுவரோடும் முற்றுப் பெற்றது என்று சிலர்கள் நினைத்துத் தங்களை யறியாமலே அப்பெரியார்களின் வணக்கத்தின் பால் ஆழ்ந்து விட்டார்கள்.

உண்மையில்லாதவைகளையும், புகழுரைகளையும், கட்டுரைகளையும், சமயப்பற்று, ஜாதிப் பற்று, தேசப்பற்று, பாஷைப்பற்று ஆகியவைகளினால் எழுந்த உரைகளையும் மறுத்துக் கண்டிக்கப் பெரியார்களும், கற்றறிந்தவர்களும் முன் வருகிறார்களில்லை- இவர்கள் முன்வராம லிருப்பதால் மொழிக்கும் சமயத்துக்கும் பொய்யுரைகள் ஏற்றப்படுவது இயற்கையே.

தமிழின் பெருமையைத் திருவாளர், பெ. திருகூட சுந்தரம் பிள்ளையவர்கள் ஆராய்ச்சி செய்து வெளிப்பரப்புவது போல், ஒவ்வொரு கற்றறிந்த பெரியார்களும், பற்றும் வேற்றுமையின்றி ஏனைய மொழிகள், சமயங்கள் கட்டுரைகளோடும் ஒப்பிட்டு, உண்மையான சம்பவங்களையும், வரலாறுகளையும் ஆராய்ச்சி மூலமாய் வெளிப்படுத்த வேண்டிக்கொள்ளப் படுகிறார்கள்.

# சிறுவரும் தேச சரித்திரமும்.

(B. இராமகிருஷ்ண ஐயர்.)

சிறுவர்க்குப் பிற்கால வாழ்வுக்கு இன்றியமையாதனவாகிய ஊக்கம், விடாமுயற்சி, தேசபக்தி முதலியவற்றை விளைவிக்கக் கூடியது தேச சரித்திர அறிவேயாகும். தான் கற்ற விஷயங்களைக் கூடியமட்டும் அனுஷ்டானத்துக்குக் கொண்டுவர அவாக்கொள்வது சிறுவர் இயற்கை. தாம் கண்டு கேட்டு வியப்புறும் அருங்குணத்தினரான பெரியாரின் நடையுடை பாவனைகளைப் பின் பற்றவே அவர் பெரும்பாலும் விரும்புவர். உலகத்தில் உன்னத பதவிக்கு வந்துளோர் அநேகர் இளமையில் தம் தந்தை தாயிடம் கற்ற பண்டைப் பெரியாரின் வீரக்கதைகளே காரணமாய் மனவெழுச்சியடைந்துளார். சிவாஜிராஜன் இளமையில் தம் தாயின் மடிமீதமர்ந்து அன்னவர் செப்பிய ராமாயண முதலிய கதைகளைக் கேட்டு, மிகவீரம் பெருகி இந்து மதத்தைக்காக்க ஓர் ஊக்கமும், தம்மால் இயலாதது என்று உலகில் ஒன்று இலது என்று எண்ணும் திண்ணமும் பெற்று பிற்காலத்தில் திறமை பெற்ற சேனை மன்னரையும் கலக்கமுறச் செய்தார். வீரஞான நெப்போலியன் தன் திரண்ட படையோடு ஆல்ப்ஸ் மலையைக் கடக்க நேர்ந்தபோது, படைவீரர், அதன் முன் பலர் முயன்றும் அவ்வுன்னத மலையைக் கடந்து சென்றவர் இலர் ஆதலின், இம்முயற்சி வீண் முயற்சியே எனக் நவில, அஞ்சா நெஞ்சுடைய நெப்போலியன் செப்பியதாவது "Impossible! It is a word found only in the Dictionary of cowards; On with your men now" என்று ஊக்கமளித்து நினைத்த கோரிகையை ஈடேற்றிய திண்மையை அவர் அடைந்தது எங்ஙனம்? அவ்வீரனையும் போரில் வென்ற நெல்சன் பிரபு, இளவயதில் "Fear! What is it? Is there any such thing in the world?" என்று வினவியதும் உண்டென்றால் இத்துணிபுக்கு இன்னவர் இளமையில் வளர்க்கப்பட்ட வளர்ப்பன்றோ காரணம். ஆதலின் சிறுவர்க்குப் போதிய அளவு சரித்திர அறிவு போதிப்பது பெற்றோர் கடமையாகும். மாதர் கல்வி கற்றலின் அவசியமும் ஈண்டுணர்தல் தகும்.

ஆனால் தற்காலத்திலோ தாய் தந்தையர் தம் குழந்தைகளுக்கு ஒழிவு நேரங்களில் வார்த்தையாடுவது இரண்டு கண்ணன் கதைகளும் பூனைக் கதைகளுமே. இதுவும் எதற்காகச் சொல்லுகிறார்க ளென்றால் (முரண்டு செய்யும்போது) அவர்களைப் பயமுறுத்தவேயாம். இரண்டு மூன்று குழந்தைகளுக்குமேல் பெற்றுள்ள வாலிப தம்பதிகள் நவீன நாகரீகப் பழக்கத்தால் உடலில் சக்தியற்றிருப்பதாலும் "இடமில்லாத இடத்திற்கேன் கணவனைப் பெற்றவளும் வந்தாளாம்"—(The mother-in-law is a regular nuisance) என்று சிறுமிகள் சொல்வதுபோல் பெரியோர்களை அணுகவொட்டாத படிக்கும் செய்து கொள்வதாலும் அக் குழந்தைகளைத் தக்க வழிகளில் சமாதானப் படுத்த வியலாது இம்மாதிரி பயமுறுத்துகிறார்கள். அந்தோ! இச்சிறுவர்கள் பிற்காலத்தில் பயங்காளிகளாகவும் சோம்பேறிகளாகவும் ஜன சமூகத்தில் கலந்து கொள்ள விருப்ப மற்றவர்களாக

வும் ஆகிவிடுகிறார்கள். இத் துறைகளில் இந்திய நாடு பன்னாட்டாராலும் ஏளனம் செய்யப்பட்டு வருவது யாவரு மறிந்த விஷயம்.

இனிப் பள்ளிக் கூடங்களில் தேச சரித்திரம் கற்றுக் கொடுக்கப்படுகிற தே அது போதாதோ என்று கேட்கலாம். ஆங்குள்ள-பிரசுரமாகி யிருக்கும் பாடப் புத்தகங்கள் பெரும்பாலும் தேச பக்தியை ஊட்டும் சாதகங்களில் ஓர் சிறிதும் காணப்படவில்லை. மன்னர்களின் பெயர்களும் வம்சாவளியும் அவர் கள் ஆண்ட வருஷங்களுமே அங்கே காணப்படுகின்றன. ஓர் பள்ளிக்கூடத் துப் பரீக்ஷைக்கேள்விகளில் பின்வரும் கேள்விகள் காண்கின்றன—

3 a. 1814 டில்லியில் எந்த பரம்பரை ஆண்டு வந்தது. அந்த அரசன் பெயரென்ன?

b. அக்பர் எதுமுதல் எதுவரை அரசாண்டார்? அவர் செய்த நன்மை களென்ன?

c. துக்ளக் அரசனின் மூடத்தனமான செய்கைகளென்ன? மேற் சொன்ன கேள்விகளுக்குத் தயாராகும் மாணவர்க்கு அக் கல்வி எத்துணைப் பலனளிக்கும் என்பதை நேயர்களே ஊகித்தறிந்துகொள்ளலாம்.

இந்திய சரித்திரத்திற்கு இவற்றைத் தவிர விஷயங்களில்லாமலா போயிற்று! வீரர்கள் செறிந்து விளங்கிய நாடு அன்றோ நம் பாரத நாடு. "செயற்கரிய செய்வர் பெரியர்" என்றபடி ஆங்காங்கு கண்டோர் வியக்கும் படிக்கான அதிசயச் செயல்களைச் செய்து காட்டிய உத்தம மதக் குரவர்க ளென்ன, தந்தை தாயர் ஏனைய ஐங்குரவர்களிடம் நன்னடக்கையாக நடந்து அன்னவரிடம் கல்விகற்று வீரம் செறிந்து என்றும் மறையாத புக ழூடம்பு வளர்த்த பூபாலர்களென்ன, வைத்திய சாஸ்திரத்தில் கபாலசல்யம், ஸம்மோஹினிப் பிரயோகம் முதலிய தற்கால நூதனமே நாட்டுப் புதுமை யெனப் புகன்றுவரும் அரிய துறைகளில் பண்டையில் மேன்மையுடன் உழைத்த பண்டிதர்களென்ன. கலகமும் விரோதமும் உயிர்பயமும் மேலோங் கியிருந்த மத்திய காலத்தில் நாட்டையும் தம்மிடம் அடைக்கலம ஒப்புவிக்கப் பட்ட யுவராஜாக்களையும் சமயோசித புத்தியோடும் தீரத்தோடும் பின்வாங் காது பாது காத்துதவிய மாது சிரோன்மணிகளென்ன, இன்னும் இத்தகை யாரின் ஜீவியங்களும் அவரது அரிய செய்கைகளும் விரிந்து தோன்றும் புத்த கங்க ளன்றோ நமது நாட்டுக்கு உத்தம உதவி செய்யக்கூடியதாக உள்ளன.

அல்லாவுதீன் உக்கிராணத்தில் கவர்ந்து மறைத்திருந்த செல்லப்பிள்ளை யார் என்ற ஹிந்து ஆலய விக்ரகத்தைப் பெற வந்து அந்த மகம்மதிய மன் னன் திகைக்குமபடி அவ்விக்ரகத்தைப் பேரிட்டழைத்துத் தம்மிடம் நடந்து வரச் செய்த ஸ்ரீமது இராமாநுஜாசாரியாரும் சரித்திரம் இடந்தராத சாமான்யரோ! நீதி நெறிவிளக்கம் முதலிய அரிய நூல்களியற்றிய குமரகுரு பரர் புலியிவர்ந்து காசி செல்வதாகக் கேள்வியுற்ற அக்பர் சக்கரவர்த்தியால் விருந்து உபசரிக்கப்பட்டு மாமிச உணவைத் தீங்கனியாக மாற்றிய விந்தை யும் சரித்திர புத்தகத்தி லுளதோ.

ஆதலின் மாணவர்க்கு மன உற்சாகத்தையும் நாமும் பிற்கால வாழ்வில் நாட்டுக்கு நன்மைசெய்யும் ஆற்றலை அடைவோம் என்னும் நம்பிக்கையையும் செய்விக்கக் கூடிய மேற்சொன்ன விஷயங்களடங்கிய புத்தகங்கள் நிறுவும் படி செய்வதும் பெற்றோரும் ஆசிரியர்களும் இளஞ்சிறார் மனம் வளம்பெறும் வகை போதித்து வருவாராயின் நம் நாடு கூடிய சீக்கிரம் ஏனைய நாடுகளுக்கு வழிகாட்டியாகும் என்பதில் ஐயமின்று. இறைவன் அருள் புரிவாராக.

# "எறும்புகள் மகாநாடு"

(ஒரு நண்பர்.)

சுவரின்மேலிருந்து கீழ்நோக்கி ஒரு எறும்பு வெகு விரைவாய் வந்து கொண்டிருந்தது. மேல் நோக்கிச் சென்றுகொண் டிருந்த மற்றொரு எறும்பு அதைச் சந்தித்தது. இரண்டும் வெகுநேரம் வரை ஏதோ பெரிய விஷயத்தைச் சம்பாஷித்துக்கொண் டிருந்துவிட்டு மேல் நோக்கிச் செல்ல ஆரம்பித்தன. நான் மிகவும் கவனத்தோடு அவைகளை உற்று நோக்கிக்கொண்டிருந்தேன். அவைகளின் சம்பாஷணை எனக்குக் கீழ்க் கண்டவாறு புலப்பட்டது.

மேலிருந்து வந்த எறும்பு:—அண்ணே! ஏன் அழுதுகொண்டே சென்று கொண் டிருக்கின்றீர்கள்?

.........தம்பி! அஃதேன் கேட்கின்றாய். இந்தப் பாழும் மனிதர்களாகிய ராக்ஷதர்கள் இருக்கும்வரை வேறு காரணமும் வேண்டுமோ?

.........என்ன! வீட்டை அழித்து விட்டார்களா? அல்லது பலரை நசுக்கி விட்டார்களா?

.........பாவிகள்! இவர்களால் வீட்டை அழிக்க முடியுமா. வழியைத்தான் அடைத்து விட்டார்கள். சுமார் 30,40 பேரை நசுக்கியும் விட்டார்கள்.

.........ஆண்டவனே! எமக்கு எமபடர்கள் போன்ற இச் சோம்பேறி ராக்ஷதர்களை வீணே ஏன் படைத்தாயோ? தெரியவில்லை.

.........அஃதேன் சொல்லுகிறாய். ஒரு ராக்ஷதன் நாங்கள் அனைவரும் சேர்ந்து வெகு சிரமத்தோடு இரை எடுத்து வீட்டிற்கு வந்துகொண்டிருக்கும் பொழுது எங்கள் வழியைத் தனது ராக்ஷதகாலால் மறைத்துக்கொண்டான். நாங்கள் சற்று விலகியே செல்ல ஆரம்பித்தோம். ஆனாலும் என் மகன் வாலிபனானபடியால் இவர்கள் செய்யும் கொடுமையைச் சகிக்கமாட்டாது ஆக்ரோஷத்தினால்காலின்மேல் ஏறி நன்றாகக்கடித்து விட்டான். இது போதாதா இந்த அனியாய ராக்ஷதர்களுக்கு? உடனே கால் பெரும் மலையைப்போல் மேலெழும்பி அருகில் சென்றுகொண்டிருந்த பலரை நசுக்கியது. பயந்து எடுத்துவந்துகொண் டிருந்த இரையைப் போட்டுவிட்டு, சிதறி இங்கு மங்கும் ஓட ஆரம்பித்தோம். ஓடிக்கொண்டிருப்போரை மற்றொருதடவை நசுக்கினான். இத்துடன் நிறுத்திக் கொள்ளவில்லை. அருகிலிருந்த நமது வீட்டிலும் பாவியின் கண் பட்டுவிட்டது. நாங்கள் வெகு சிரமப்பட்டு ஒவ்வொன்றாக உருண்டு புரண்டு சுமந்துவந்து வெளியே தள்ளின கற்களை, ஒரு நிமிடத்தில் சற்றும் யோசியாது தனது காலால் எங்கள் வீட்டிற்குள்ளே தள்ளி மற்றொரு பெரிய கல்லையும் எடுத்துவைத்து நன்றாக அடைத்து விட்டான். எங்கள் மனம் எரிய எரிய அதன்மேல் இன்னும் மண்ணைத்தள்ளி அதிகமாக கெட்டிப்படுத்தி விட்டான்.

மற்றது:—அடடா! இதற்கு ஒரு முடிவில்லாமலல்லவா போய்விட்டது. பலசாலிகள் பலவீனர்களை நசுக்குவது நியாயமாகி விட்டதே! இந்த ராக்ஷதர்கள் நீதி என்ன நீதியோ, இவர்கள் சட்டம் என்ன சட்டங்களோ! தெரியவில்லை.

ஆண்டவனே என்று யாருடைய காரியத்திலும் தலையிடாது எங்கள் வேலையில் ஈடுபட்டிருக்கும்போது ராக்ஷதர்வந்து வழிமறிப்பதுமின்றி அட்டஹாசமும்புரிய ஆரம்பிக்கின்றார்களே! இதைக் கேட்பாரில்லையோ! நம்மில் ஒரு வாலிபன்தான் கடித்தானும். இதற்காக அனைவரையும் அழிப்பதா? வீட்டை நாசப்படுத்துவதா? இது என்ன நியாயமோ! இவர்களுடைய கோபத்தில் மண்விழ. ஒருவன் கடித்ததற்காக அவனுடைய உயிரை வாங்குவது நியாயமாகாதே. இவர்களில் ஒருவன் செய்த குற்றத்திற்காக அநேகரை உலகத்தில் வாழும் உரிமையினின்றும் நீக்கி விடுதல் இவர்களுக்கு சம்மதமாகுமா?

.........இது மட்டுமா—நேற்று பக்கத்து வீட்டுக்குப் போயிருந்தேன். திரும்பி வெளியே வரும்போது ஒரு ராக்ஷதக்குழந்தை பெருங்குச்சியை எடுத்து எங்கள் வீட்டை இடித்துக்கொண்டிருந்தது. நான் உயிருடன் வீடு திரும்புவேன் என்று நினைக்கவில்லை. சிறிது பின்னிடைந்தேன். இதற்குள் அவ்விராக்ஷதக்குழந்தை, தண்ணீரை ஊற்ற அது வெள்ளமாய்ப் பெருகி வீட்டினுள் ஓடிவந்தது. வீடு முழுவதும் வெள்ளமாய்விட்டது. அனைவரும் நனைந்தோம். கொஞ்சநேரம் கழித்து வெளிவந்தேன். நம்முடைய உயிர் அடுத்த நிமிடம் நிலைத்திருக்கும் என்பதற்கு நம்பிக்கையில்லை. இதை நிவிர்த்தித்தாலொழிய வேறு கதியுமில்லை.

.........ஆண்டவன் இவர்களுக்குத்தான் உலகத்தைச் சிருஷ்டித்திருக்கிறான் என நினைத்துக்கொண்டிருக்கிறார்கள்போல் இருக்கிறது. நாமும் ஒரு உயிர்தானே. நமக்கும் உலகத்தில் வாழ உரிமையுண்டு என்பதை அறியார் போலும். இவர்களுக்கு அறிவு எப்பொழுது வரப்போகிறதோ தெரியவில்லை.

விடிந்து வெகுநேரமாகி நாம் இரைதேடிக்கொண்டிருக்கும்போதுங்கூட இவர்கள் படுக்கையில் மலையைப்போல் புரண்டுகொண்டு கிடக்கிறார்கள்; உட்கார்ந்தால் உட்கார்ந்தபடியே எழுந்தால் எழுந்தபடியே இருந்துவிடுகின்றனர். நமது சுறுசுறுப்பையும் நாகரீகத்தையும இவர்கள் எப்பொழுதுதான் கற்றுக்கொள்ளப் போகிறார்களோ தெரியவில்லை. பிறரை இம்சிப்பதே தமது தொழிலாக வைத்துக்கொண்டிருக்கின்றனர். கஷ்டகாலத்தில் உதவுவதற்காக, நல்லகாலத்திலேயே வேண்டியவற்றைச் சேகரித்து வைக்க இவர்களுக்குப் போதிய யோசனை இல்லை. இங்ஙனமிருந்தும் தாங்களே உயர்ந்த சிருஷ்டியென கர்வங்கொண்டிருக்கின்றனர்.

.........இவர்களுடைய கர்வத்திற்கு என்ன குறைச்சல்? முதலில் நம்மிலுள்ள ஒற்றுமை இவர்களில் உண்டா?

ஒரு வஸ்துவைக் கண்டால் நாம் அனைவருங்கூடி உருண்டு புரண்டு அதை உருட்டிப் புரட்டி எவ்வளவு பாரமானதாயிருப்பினும் விடாமுயற்சியால் நமது வீடு கொண்டுவந்து சேர்த்து, ஒருவர் பட்டினி என இல்லாமல் அனைவரும் பங்கிட்டுச் சாப்பிடுகிறோமல்லவா? அது இவர்களில் உண்டா? ஒருவன் பெரும்பான்மையான நிலத்தையும் ஏராளமான பணத்தையும் தனதாக்கிக் கொள்ளுகின்றனன். அநேகர் இருக்க இடமின்றி உடுக்க ஆடையின்றி உண்ண உணவின்றித் தவிக்கிறார்கள். இவர்கள்தான் பெரிய

அறிவாளிகளாம்! நாகரீகர்களாம்! நாமெல்லாம் அற்பப் பிராணிகளாம்! இவர்கள் எண்ணம்தான் என்னே? உலகத்தில் பிறந்த ஒவ்வொரு பிராணிக்கும் வாழ உரிமையுண்டு; அவரவர்கள் வாழ்க்கைக்கு வேண்டியவற்றை அனைவரும் சரி சமமாகப் பங்கிட்டுக்கொள்ளல் வேண்டும் என்பதை எப்பொழுதுதான் உணரப் போகிறார்களோ! தெரியவில்லை.

.........எல்லாம் ஒருவனே சொந்தமாக்கிக் கொண்டால் மற்றவர்கள் என்ன செய்வார்கள் என்பது இவர்களுக்குத் தெரிந்தா லல்லவோ? தாராள மனப்பான்மை இவர்களில் இருந்தா லல்லவோ?

.........இவர்களுக்கு அறிவுகூட இருக்காதென்றே நினைக்கின்றேன். ஒருவன் ஏதாவதொரு குறும்பு செய்து விட்டால் அவன் எக்கோஷ்டியைச் சேர்ந்தவனோ அக்கோஷ்டியினர் அனைவரும் அவனைப் போன்றவர்களாகவே இருப்பார்கள் எனத் தீர்மானித்து விடுகின்றனர். நம்மில் எத்தனைபேர் இவர்களைக் கண்டால் பயந்து ஓடுபவராக இருக்கிறோம். அப்படியிருந்தும் நம் கூட்டத்தினர் அனைவரையும் கடிக்கும் பிராணிகளென்றே—ஆபத்தான பிராணிகளென்றே தீர்மானித்து வைத்திருக்கிறார்க ளல்லவா? நம்மில் ஒரு சிலர், கோபம் ஏற்பட்டால்—அதுவும் இவர்களால் உண்டாக்கப் பட்டால் தானே இவர்களைக் கடிக்கின்றனர். இது யாருடைய குற்றம்? நான் நேற்று அடுத்த வீட்டில் இரைதேடிக்கொண் டிருந்தேன். அப்பொழுது இவர்களில் இரண்டுபேர் பேசிக்கொண் டிருந்தனர். அதில் ஒருவன்—யாரோ முஸல்மானும்—அவன் ஏதேதோ செய்தானும். அதை மற்றவனிடத்தில் சொல்லிக்கொண் டிருந்தான். இதைக்கேட்டு மற்றவன் "துலுக்கர்களே இப்படித்தான்—முரடர்கள்" எனக் கூறினன்.

.........ஓ! எனக்கும் ஞாபகம் வருகிறது. சில நாளைக்குமுன் இரண்டு பேர் பெரிய தொப்பிகளைத் தலையில் வைத்துக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன், யாரோ ஹிந்துவாம். ஏதோ பேர் சொன்னன். அவன் முஸல்மான்களுக்கு எதிரியாய் இருக்கிறனும், அதைச் சொல்லிக்கொண்டிருந்தான். இதைக்கேட்ட மற்றவன்,

"இந்த நபர்களே இப்படித்தான். இவர்களை ஒருவர் விடாது நசுக்க வேண்டும்" எனக் கூறினன்.

.........பார்த்தாயா? இவர்கள் நம்மை மட்டும் கெட்டவர்களெனத் தீர்மானித்து நாசப்படுத்துவதோடு நில்லாது அவர்களுக்குள்ளும் ஒருவரோ டொருவர் சண்டைபோட்டு மண்டை உடைத்துக் கொள்கிறார்கள் என்பது விளங்குகிற தல்லவா? ஓரிரண்டு பேர் செய்ததை வைத்துக் கொண்டு அக்கோஷ்டியினரையே கடிந்து பேசுவதைக் கேட்டாயா? இவர்கள் பெரும் அநாகரீகர்கள். ஒற்றுமை, அன்பு, தயாளகுணம் இரக்கம், பரந்த நோக்கம் இவைகள் இவர்களிடம் கிடையா.

.........இவர்களுக் கெங்கிருந்து இவைகள் வரப்போகின்றன. அது சரி, இவர்களிடமிருந்து நமது உயிரைக் காப்பாற்ற ஏதாவதொரு வழிதேட வேண்டாமா?

......ஆம், தேடத்தான் வேண்டும். எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நமது கோஷ்டியினர் அனைவரையும் அழைத்து ஒரு மகாநாடு கூட்டி அதில் நம்முடைய கஷ்டங்களை நிவர்த்திக்க வழிதேடவேண்டும்.

# பக்தி.

(பண்டிதர் சே. ரா. கணபதி சுப்பிரமணிய ஐயர்.)

## ஆசிரியப்பா

சிரவணம் கீர்த்தனம் ஸ்மரணம் சேவையோ
டருச்சனை வந்தனம் அருந்தாஸ் யஞ்சக்யம்.
ஆத்ம நிவேதனம் ஆகிய ஒன்பதும்,
பக்தியின் நெறியெனப் பகர்ந்தனர் பெரியோர்; (4)

ஞானியும் கர்மியும் நானிலந் தன்னில்
பக்தியா லேயே பாகதி பெறுவர்
எல்லோர் தமக்கும் பக்தி யுரியதாம்
வல்லோர் வாயிதை வகுப்புறக் கேண்மின் (8)

துருவனும் பிரஹ்லா தனும்பக் தியினல்
பெரும்பே றற்ற பெற்றிய தோர்ந்தால்
பக்தியைச் செய்து முக்தியைப் பெற்றிட,
வயதுகா ரணமாம் நியதியே யில்லையால்; (12)

ஈசனைத் துதிப்பதால் நேசமா யீசற்
குறுபய னொன்று முலகினி லில்லையால்;
பக்தியிற் கடவுளைப் பாவினல் மனது
சுத்தியாய் ஆத்மா நித்தியந் தோன்றுவர்; (16)

உறுபெரும் பேறு வேறெதா மிதனில்?
பாகதி யென்று பகர்வதே யிதுவால்;
விடயப் பற்றினல் அடைவது பயமாம்
கடவுளைப் போற்றினல் கவலை ஒழிந்திடும் (20)

அப்பரும் பிரஹ்லா தவனும் ஈற்றி
லொப்பிலா வெற்றி யுற்றதை யோர்மின்;
ஆதலி னவனடி யகத்தினிற் சேர்த்துப்
பேதமி லாப்பதம் பெற்றிடு வீரே. (24)

## நேரிசை வெண்பா.

சிந்திக்கத் தித்திக்கும் தேவன் திருவடியை
வந்தித்து முப்பொழுதும் வாழ்த்துவார்—சந்ததமும்
செம்மையுறு நன்னெறியிற் சேர்ந்துபதம் பெற்றிடுவர்
இம்மையினும் வாழ்வ ரினிது. சுபம்!

---




(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

## இல்லற வொழுக்கம்

உலகமெல்லாம் புகழ்பெற்ற லோகமாதாவான ஔவையார் தாம் லோகோபகாரார்த்தமாக இயற்றிய ஆத்திசூடி யென்ற நீதி நூலின் முதல் வாக்கியமாகிய 'அறஞ்செய விரும்பு' என்றதின் முதற் கண்ணின்ற "அறம்" என்பதை விளக்குவதற்கே, இவ்வாக்கியத்தை அருளிச் செய்தார். அறம் என்பது தருமம் என்று வேதபுராணேதிகாச ஸ்மிருதியாதி நூல்களிலேயே புகழ்ந்து கூறப்பட்டுள்ளது. ஆதலால் அறம் தர்மம் என்பன ஒரு பொருட் சொற்கள்.

இவ்வறம் ஜீவவர்க்கங்கள் எல்லாவற்றினும் மேம்பட்ட மானிட ஜீவாத்மாவினிடம் நிகழ்வதாகிய ஒரு விசேஷாதிசய குணமென்று நூல்கள் கூறுகின்றன. ஆதலால் இதர ஜீவவர்க்கங்களிடம் இது காணப்படாது; மானிடர்க்கே உரியது. இது புருஷார்த்தம் நான்கனுள் முதலில் வைக்கப் பெற்ற சிறப்புடையது. புருஷார்த்த மென்பது மானிடர் பெறவேண்டுவனவாகிய நான்கு செல்வங்கள்; ஆண் பெண் இருவர்க்கும் பொதுவாயுள்ளன. அவை அறம் பொருள் இன்பம் வீடு (தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம்) என்பன. "தருமம், பொருள் காமம் வீடெனும் நான்கும் உருவத்தாலாய பயன்" என்று அன்னையாரே கூறி யருளினர்.

'ஈதலறம் தீவினைவிட் டீட்டல்பொருள் எஞ்ஞான்றும்
காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே இன்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு'

என்று கூறிப் புருஷார்த்தங்க ளின்னவையென்று விளக்கி யருளினர். இப் புருஷார்த்தத்தின் முதல் மூன்றும் உலக வாழ்க்கைக் கின்றியமையாதன. இம்மூன்றனுள்ளும் முதற்கூறிய தருமம் அர்த்தம் (அறம் பொருள்) என்பன இரண்டும் மிகச் சிறந்தன. ஏனெனில் அவை யிரண்டும் இணைபிரியா நேசரைப்போல் ஒன்றை யொன்று கூட்டுவிக்கும் திறலுடையன. அறம் பொருளைத் தரும்; பொருள் அறத்தைத் தரும். இதனை,

'திரையவித்து நீராடலாகா உரைப்பார்
உரையவித் தொன்றுஞ்சொல் லில்லை—துரைசாரய்ச்
செய்துமா மெண்ணினு மாகாதவரையாற்
செய்தவர்க்கே யாகுந் திரு'

என்பதனு லுணர்க.

உலக வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. 'அருளில்லார்க் கவ்வுலக மில்லை, பொருளில்லார்க் கிவ்வுலக மில்லாகியாங்கு' என்ற தேவர் வாக்காலும் அதுபவத்தாலு முணர்க. அப்பொருளும் நன்னெறி யொழுகி அறம் புரிந்தார்க்கன்றி எய்தப் பெறுவதில்லை.

'சிறப்பீனும் செல்வமுமீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ உயிர்க்கு'

'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தானிடை'

என்பனவற்றால் அறமே பொருளுக்குக் காரணமாகு மென்பது நன்கு விளங்கும். அந்தப் பொருளால் அறமும் இன்பமும் சிறப்பவுண்டாகும்.

'ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க்கெண்பொருள்
ஏனையிரண்டு மொருங்கு'

'அறனீனு மின்பமுமீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்'

'அருளென்னும் அன்பின் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியா லுண்டு'

என்பனவற்றால் பொருள் தரும காமங்களைத் தரும் என்பது விளங்கிற்று. தருமம், பொருள் இன்பங்களையும், பொருள், தரும வின்பங்களையும் தருவதுண்மையாலுல், பொருளொன்றே போதுமான தாதலால் அறம் புரிதல் வேண்டா வெனின், 'உளவரை யறஞ்செய்த வர்க்கே யாகுந்திரு' என்றதனுல் அறம் புரிந்தார்க்கே செல்வ முண்டாகும் என்பது காண்க.

அப் பொருளைக்கொண்டு தருமத்தை மேன்மேலும் அதிகந் தேடின் பாவமொழிந்து, நல்லறிவுதிக்க முத்தி கிடைக்கப் பெறுமாதலால் அறமே முக்கியமா மென்க. இதனை,

'செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்—வையத்
தறும்பாவ மென்றறி றறிந்திடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல்'

என்று கூறி யிருத்தலாலு முணர்க.

ஒரு ஜன்மத்திற் செய்த தருமமே மறு ஜன்மத்தில் அர்த்த காமங்களை அளிக்கும். தருமத்திலும் புத்தியை யுண்டாக்கும். அது காரணமாக ஞானமுதித்து முத்தியின்ப முண்டாம். அறத்தாலேயே மூன்றும் எய்தப் பெறலால் அறம் புரிவதற்காக மனிதப் பிறப்புண்டாயிற்றென்று கொள்க. இதனை,

'அரியது கேட்கின் வரிவடிவேலோய்
அரிது அரிது மானிடராதலரிது
மானிடராயினுங் கூன் குருடு செவிடு
பேடுநீக்கிப் பிறத்த லரிது
பேடுநீக்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியும் நயத்த லரிது

ஞானமுங் கல்வியும் நயந்த காலையும்
தானமும் தவமும் தான்செய லரிது
தானமும் தவமும் தான்செய்வாராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே'

என்ற அன்னையார் திருவாக்கா லுணர்க. அறம் இகபர போகங்களையும் பந்தமற்ற மோக்ஷத்தையும் கொடுப்பதாயின் அதன் பெருமை அளவிடற் கரியதா மென்க. அதன் பெருமையை உள்ளபடி உணர்ந்த அன்னையார், 'அறஞ்செய விரும்பு' என்று கூறிப் பின்னும் 'அறனை மறவேல்' என்று வற்புறுத்திக் கூறினர். அதனை விளக்கவே—'இல்லறமல்லது நல்லற மன்று'—என்று ஈண்டுக் கூறினர்.

ஈண்டு அறமென்பது அறம் புரியும் நெறியை. அவ்வறந்தான் இல்லறம் துறவறம் என்று இருவகைப்படும். அவற்றுள் பின்னைக்கூறிய துறவறம் எல்லாராலும் இயற்றத் தக்கதன்று. கீழ்ச் சென்ற அநந்த ஜன்மங்களில் நெறிபிறழாது அறம் புரிந்தார்க்கன்றி இயற்றலரிது. எல்லாராலும் இயற் றக்கூடியதும் பெரும்பயனைத் தரத்தக்கதும் இல்லறமே யாம்.

'துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று'

என்ற தாதியால், துறவறம் புரிவோன் மகிமையை அளவிறந்த தென்று கூறி யிருக்க அதனை நன்றன்று என்று கூறுவ தெங்ஙனம் பொருந்து மென்னின், பல ஜன்மங்களுக்கு முறைபிறழாது இல்லற மியற்றுவார்க்கு, அதனாற் சித்த சுத்தியும் ஞானமுமுண்டாகும். அதனால் ஜனன மரண துன்பங்களும் மோக்ஷ இச்சையுந் தோன்றும். தோன்றவே தானே அகத்துறவுண்டாகும். ஏனை யர்க் கெய்தாது. ஆதலால் துறவுண்டாவதற்கும் இல்லறமே காரணமாம். இதனை—

'ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிபு'

என்றதனா லறிக. இல்லறந் துறவறத்துக்குக் காரணமா யிருப்பதுமன்றி இம்மையிலேயே அகத் துறவையும் மோட்சத்தையும் கொடுக்கும் ஆற்ற லுடையது. இதனை—

'அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்'

என்றதனா லறிக.

இவ்வாற்றான் இல்லறத்தின் மகிமை ஈண்டு கூறப்பட்டதேயன்றித் துறவறத்தை இகழ்ந்ததில்லை யென்று கொள்க. அன்றியும் துறவு பூண்டான் அந்நெறியிற் சிறிதும் வழுவாதொழுக வேண்டும். வழுவின் பயன் கொடா மல் நரகதுன்பத்தி லழுத்தி விடும். இல்லறமோ அவ்வாறன்று. வழுவுத லுண்டாயின் அதற்கென ஏற்பட்டுள்ள பிராயச்சித்தவிதியாற் பரிகரித்துக் கொள்ளவும் கூடும். பிறகு நெறிபிறழா தொழுகி நற்கதி பெறலு மாகும். இதனாலேதான்—

'ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து'

'அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று'—

என்றுந் தேவர் கூறினர். இதனால் இல்லறம் சாதாரணமாய் எல்லாராலும் இயற்றிப் பயன்பெறத் தக்க தென்றும் அதில் வழுவுத லுண்டாயினும் பரிகரித்துக் கொள்ளக்கூடு மென்பதும் துறவறம் சர்வ சாதாரண மல்ல வென்பதும் இயற்றுதற் கரிதென்பதும் துறவறத்தில் வழுவுறப் பெறின் நரகப் பிராப்தயே கிடைக்குமென்பதும் பெறப்பட்டன. இதனால் துறவறம் இகழப் படவில்லை யென்றும் துறவறத்தின் பெருமையே கூறப்பட்ட தென்றும் கொள்க.

அன்றியும் கல்வி யுணர்ச்சியால் ஜனன மரண துன்பங்களை யுணர்ந்து, வீட்டு நூலோதிச் சிரவண மனனாதிகளாற் றெளிவுபெற்று, இகபர போகங்களை வெறுத்துப் புறப்பற்றுக்களைக் கஷ்டப்பட்டொழித்து, வேதாந்த சிரவணாதிகளாலும் சமதமங்களாலும் மனதை வசப்படுத்திப் பசி, தாகம், காற்று, மழை வெய்யில், குளிர், இன்ப துன்பாதிகளைச் சமனாக மதித்துச் சகித்துப் பிராணன் நீங்காதிருப்பதற்குப் போதுமான உணவை இல்வாழ்வாரிடம் ஐயமேற்றுண்டு கண்ட இடங்களிலே படுத்துறங்கிச் சதா பிரமத்தியானத்திலிருந்து நிஷ்டைகூடி ஜகத்தை மறந்திருப்பதான கஷ்ட நெறியாம். இது ஒருவகையான தெய்வ வழிபாடான முத்திநெறி. இதுவே துறவற மெனப்படும். குருகுலவாசஞ் செய்து கலைகளை யோதியுணர்ந்த பின் குருவின் அநுக்ஞை பெற்றுச் சன்மார்க்கத்திற் பொருளீட்டி மனமொத்த மனைவியோடுகூடி இன்ப மநுபவித்துக்கொண்டு இல்லற விதி வழுவாமல் அறம் புரிந்து மனமொழி மெய்களால் தெய்வத்தை வழிபட்டு முத்தி பெறுதலாம். இது ஒரு முறை; இருநெறியும் தெய்வவழிபாடே யாயினும் இல்லறம் கஷ்ட மிகவிலாமல் இயற்றக்கூடிய தென்றும் துறவறம் மிகுந்த கஷ்டத்துடன் செய்யத்தக்க தென்றும் நன்கு புலப்படும். ஆதலால் அன்னையார் இல்லறத்தைப் புகழ்ந்து கூறினர்.




## வேதாந்த சூடாமணி வசனம்.

(தமிழ்ப் பண்டிதர் பூ. ஸ்ரீநிவாசன்.)

"அத்தியாரோப மபவாதமென விரண்டா யறைகுவர் கற்பிதம்" கற்பிதம் இரண்டுவகை யெனக்கூறுவர் பெரியோர். அவை அத்தியாரோபம் அபவாதம் என்பன வாம். அவற்றுள்,

"அத்தியாரோபமாவது:—

"உள்ள சுத்தி யூடிலாதவிர சதம் விளைதல் போலச் சொல் பிரமசத்தினிலா வுலகது கற்பித்தல்".

ஓரிடத்தில் கிளிஞ்சலிருக்கிறது. அது பார்ப்பவர்களுக்குக் கிளிஞ்சலாகத் தோன்றாமல் வெள்ளி போலத்தோன்றுகின்றது. ஆனால் அங்குள்ளது கிளிஞ்சல் மாத்திரமே. வெள்ளி அதனிடத்துக் கற்பிதமாகத் தோன்றியது. அதுபோல உள்ளதாகிய சத்ரூபப் பிரஹ்மத்தில் இல்லாததாகிய வுலகம் கற்பிதமாகத் தோன்றுவது அத்தியாரோபமாம்.

இப்படியே கயிறு பாம்பாகத் தோன்றுதலும் கட்டை கள்ளனாகத் தோன்றுதலும் கானலானது நீராகத்தோன்றுதலும் அத்தியாரோபமாம். எனவே உள்ள ஓர் வஸ்துவில் இல்லாத வேறொரு வஸ்து தோன்றுதல் அத்தியாரோபமாம். ஆரோபம், அத்தியாசம், கற்பனை என்னும் வேறு பெயர்களாலு மழைக்கப்படும்.

ஆரோப மத்தியாசம் கற்பனை யாவ வெல்லாம்
ஓரோர் வஸ்துவினை வேறே யோரோர் வஸ்துவென வோர்தல்
நாரூடு பணியாய்த் தோன்றல் நரனாகத் தறியிற்றோன்றல்
நீரூடுகானல் தோன்றல் நிரந்தரம் வெளியிற் றோன்றல்.
இப்படிப்போல நாமரூபங்க ளிரண்டு மின்றி
யொப்பமா யிரண்டற் றொன்று யுணர்வொளி நிறைவா யிற்கு
மப்பிரமத்திற் றோன்றுமைம்பூத விகார மெல்லாம்
செப்பிய கற்பிதத்தால் செனித்தவென் றறிந்து கொள்ளே.

எனக்கைவல்ய நவநீதங் கூறுவதுங் காண்க.

(2) அபவாத மாவது:—

"இதுதான் வெள்ளி யதன்றிப்பியெனல் போலோர்ந்திறை மெய் பொய் யுலகமெனத் தெளித லபவாதம்."

ஆராய்ந்து பார்க்குங்கால் இது வெள்ளியல்ல, கிளிஞ்சலே என்னு முண்மை அறியப்படுகின்றது. அதுபோல, பிரஹ்மமே மெய்யாக வுள்ள வஸ்து. அதனிடத்து இவ்வுலகம் பொய் (கற்பனை)யாகவுள்ளது எனவுணர்தல் அபவாதமாம்.

அப்படியே, ஆராய்ச்சியின் வாயிலாகப் பாம்பன்று கயிறென்றும், கள்வனன்று கட்டையென்றும், சீரன்று கானலென்றும் அறிதல் அபவாதமாம். அதாவது கற்பனையைத் தள்ளி உண்மையை யறிதலாம்.

அரவன்று கயிறென்றூர்போ லானன்று தறியென்றூற்போல்
குரவன்ற னுபதேசத்தாற் கூறுநூல் வெளிச்சங்கொண்டு
புரமன்று புவனமன்று பூதங்களன்று ஞானத்
திர மென்றும் பிரம மென்றுந் தெளிவதே யபவாதங்கள்.

எனக் கைவல்யங் கூறுகின்றது.

## பிரஹ்மத்தை அறியுமிலக்கணம்

"மெய்த்த பொருளறியு மிலக்கண மூன்று மவைதாம் விளங்க தத்துவாவிருத்தி தடத்த மொடு சொரூபம்."

பிரஹ்மத்தை யறியும் லட்சணங்கள் மூன்றும். அவை அதத்வியாவிருத்தி லட்சணம், தடஸ்த லட்சணம், சொரூப லட்சணம் என்பனவாம். அவற்றுள்,

(1) அதத்வியா விருத்தி லட்சணமாவது:—

ஆக முதலன நேதியது செய்து நின்ற ஆருயிரை யறிவித்த லதத்துவா விருத்தி"

(ஒரு பொருளை யறிவிக்க விரும்பினவன் அஃதல்லாத மற்றைப் பொருள்களையெல்லாம் இதுவல்ல இதுவல்ல வெனக்கழித்து முடிவில் எஞ்சி நின்ற அப் பொருளை யறிவித்தல் அதத்வியா விருத்தி லட்சணமாம். அதத்=அது வல்லாதது; வியா விருத்தி=வேறு பிரித் தறிவித்தல்.) அதுபோல,

சரீரம் முதலிய அநாத்ம வஸ்துக்களை இது ஆத்மாவல்ல இது ஆத்மாவல்ல என நேதி செய்து அப்படி நேதி செய்யமுடியாமல் நின்ற ஆத்மாவைத் தெரிவித்தல் அதத்வியா விருத்தி லட்சணமாம்.

(2) தடஸ்தலட்சணமாவது:—

"சாகை நுனி மதியுள்ளதென் றுணர்த்தலிற் பூதாதிசகமாய காரணங்கொண்டறிவுணர்த்தல் தடத்தம்"

மூன்றும் பிறைச்சந்திரனைக்காட்ட விரும்புவோன் ஓர்மரக்கிளையின் நுனியைக்காட்டி, அதோ அந்த மரக்கிளையின் நுனியிலிருக்கிறான் சந்திரன் எனக் காட்டுதல் போல. காரியமாகிய பஞ்ச பூதங்களினாலாகிய உலகத்திற்குக் காரணமாயிருத்தலைக்கொண்டு ஆத்மாவைத் தெரிவித்தல் தடஸ்த லட்சணமாம்.

(மரத்தைக் காட்டிச் சந்திரனைக் காட்டுதலை சாகா சந்திர நியாய மென்பர், "தாலத்தின் மரங்கள் காட்டித் தனிபபிறை காட்டுவார் போல்" என்பது கைவல்யம்.

எது ஒருகாலத் திருப்பதாய் வியாவர்த்தகமாய் (மற்றவற்றினின்றும் வேறு பிரித் தறிவிப்பதாய்) இருக்கின்றதோ அது தடத்த லட்சண மெனப்படும். இதற்குதாரணம்:-காகமுடையது தேவதத்தன் வீடு என்றற் போல்வதாம். காகமுடைமையாகிய இலக்கணம் தேவதத்தன் வீடாகிய இலக்கியத்தின் கண் ஓர்காலத்திருப்பதாய் தேவதத்தன் வீட்டை யக்கிய தத்தன் வீடு முதலியவற்றினின்றும வேறு பிரித் தறிவிப்பதாயிருத்தல் காண்க என்பது தர்க்க பரிபாஷை.)

(3) சொரூப லட்சணமாவது:—

"மாகனலி விளங்கு கதிர்ச் சொரூபனெனல் போலான் மாவினிச் சொரூபமிது வென உணர்த்தல் சொரூபம்."

சூரியன், விளங்குகின்ற கிரணங்களை வடிவமாக வுடையவன் என்பது போல், ஆத்மாவின் நிஜ சொரூபமிது வென் றுணர்த்துதல் சொரூப லட்சணமாம்.

(எது (ஒன்றிற் சிறப்பா யிருப்பதாகிய குறி) எப்போது மிருப்பதாய் வியாவர்த்தகமாய் இருக்கின்றதோ அது சொரூபலட்சண மெனப்படும். இதற்குதாரணம்:—களகம்பளம் (அலைதாடி)உடையது ஆ என்றாற் போல் வதாம். களகம்பள முடைமையாகிய இலக்கணம் ஆவாகிய இலக்கியத்தின் கண் எப்போதுமிருப்பதாய் ஆவினை ஆடு முதலியவற்றினின்றும் வேறு பிரித்தறிவிப்பதா யிருத்தல் காண்க என்பது தர்க்க பரிபாஷை.)

## ஆத்மாவின் சொரூப லட்சணம்

சூரியன் வெப்பகிரண வடிவினன் எனக் கூறுதல் போல ஒரு பொருளின் நிஜ சொரூபத்தை யுணர்த்துதல் சொரூப லட்சணமாம் எனக் கூறிய படி, ஆத்மாவின் சொரூப லட்சணம் இன்ன தெனக் கூறுகிறார்.

"சொரூப நிசஞ் சச்சிதானந்த நித்தியம் பூரணமாம்."

ஆத்மா சத்தாகவும் சித்தாகவும் ஆனந்தமாகவும் நித்தியமாகவும் பூரணமாகவுமிருப்பதாம். இதுவே ஆத்மாவின் நிச சொரூபமாம். அவற்றுள்,

(1) சத்து:—"மதித்தல் மதியாமை நனவாதிகளில் தனக்கோர் வாதையிலா துண்டெனல் சத்து."

(முக்காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படாதது சத்தாம் என்பது சத்தினிலக்கணமாம்.) அதன்படி, ஆத்மாவானது,

ஒன்றையறியுங்காலத்தும் அறியாதகாலத்தும் சாக்கிரம் முதலிய அவஸ்தைகளிலும் பாதிக்கப்படாமலிருத்தலால் சத்தாம்.

(2) சித்து:—"அவத்தை யனைத்தினுமே யுதித்த விடயங்களை நின் றறிந்திடுதல் சித்தாம்."

(முக்காலத்தும் எல்லா விஷயங்களையும் அறிவது சித்தாம் என்பது சித்தின் இலக்கணமாம்.)

ஆத்மா சாக்கிரம் முதலிய அவஸ்தைகளெல்லாவற்றிலும் தோன்றும் விஷயங்களனைத்தையும் அறிதலால் சித்தாம்.

(3) ஆனந்தம்:—உவப்பினுக்கு விடய மாந்தன்மை யானந்தம்."

(முக்காலத்தும் பரமப் ப்ரீதிக்கு விஷயமாயிருப்பது ஆனந்தமாம் என்பது ஆனந்தத்தினிலக்கணமாம்.)

ஆத்மா பரமப் பிரீதிக்கு விஷயமாயிருத்தலின் ஆனந்தமாம்.

கைவல்ய நவநீதம் சச்சிதானந்தங்களின் இலக்கணத்தை:

அகலாத சத்தாவ தேது சித்தாவதே தானந்தமே தென்றிடின்
மிகுகால மூன்றுங் கெடாதிருப்பது சத்து வேறுபா டறிதல் சித்தா
மகிழ்காம நுகர்போது சுகமாகு மனுபூதி வாழ்வென்பதானந்தமே.

எனக்கூறி ஆத்மா எப்படி சச்சிதானந்த வடிவ மென்பதைப் பின் வருமாறு விளக்குகின்றது.

ஜென்மாந் தரஞ்செய்த வினைகளுடன் தருமெனில்
  செல்கால மிவனுண் டலோ
கன்மானு பவாரக சொர்க்கமெனில் வருகின்ற
  காலத்து மிவனுண் டலோ
உன்மாத யாதனு வுடல்கடவு ளுடல் மனுட
  வுடல் மாறி மாறியழியும்
தன்மாய வுடல்கெடினு மிவனிருப் பதுகொண்டு
  சத்தென்ப தொக்கு மகனே.

இருளாக மூடுஞ் சுழுத்தியி லிராத்திரியி
  லிரவிசுட ரற்ற பொழுதும்
மருளாம லிருளையும் பொருளையுந் தெரிகின்ற
  வகை கொண்டு சித்தாகுமே
பெருவாழ்வு மிக்க தானே தன்னிடத்தினிற்
  போகாத பிரியமதனு
லருகாத பிரியஞ் சுகத்தில் வருமாதலா
  லானந்தமாமைந்தனே.

பூர்வஜென்மங்களிற் புரிந்த நல்வினை தீவினைகளின்காரணமாகஇவ்வுடல் வந்ததென்றால் ஆன்மாவாகிய இவன் முன்சென்ற காலங்களிலிருந்திருக்க வேண்டுமல்லவா. இப்போது செய்து வரும் நல்வினை தீவினைகளின் காரணமாக நரகத்தையோ சொர்க்கத்தையோ அனுபவிக்க வேண்டுமென்றால் இனி வருங்காலத்திலு மிவ்வான்மா இருக்கவேண்டு மல்லவா. இவ்வாறு பல பிறவிகள் தோறும் வருகின்ற சரீரங்களழியினும் இவனழியாதிருத்தலின் சத்தென்பது பொருந்தும். இனி, எங்கும் இருண்மயமாகவிருக்கும் சுழுத்தியிலும், இருண்ட இரவிலும், சூரியனும் விளக்கும் இல்லாத காலத்தும், மயங்காமல் அந்த இருளையும் வைத்த பொருளையும் தெரிந்து கொள்ளுந் தன்மையால் ஆன்மா சித்தென்பது பொருந்தும். தானே தன்னிடத்தில் நீங்காத பிரிய வடிவாயிருப்பதனுல் ஆன்மா ஆனந்த சொரூபியாம்.

(4) நித்தியம்:—"திரித்த சதோ நிதநித்தம்"

(முக்காலத்து மழிவின்றி யிருப்பது நித்தம் என்பது நித்தியத்தி னிலக்கணம்.) ஆத்மா முக்காலத்து மழிவற்றதா யிருத்தலின் நித்தியமாம்.

(5) பூரணம்:—"அனைத்தினுஞ்சாதக மாங் திறத்தினு லனைத்தினுஞ் சம்பந்தம் நிறைவு."

(நீக்கமற யாண்டும் நிறைந்திருப்பது பூரணமாமென்பது பூரணத்தி னிலக்கணம்.)

ஆன்மா கற்பித மாகவுள்ள எல்லாப் பொருள்களுக்கும் அதிஷ்டானமாய் கடத்தில் மண்போல எவ்லாவற்றினும் சம்பந்தமுடையதாயிருத்தலின் பூரணமாம்.

## ஆனந்தம் விளங்கும் முறை

ஆன்மா சச்சிதானந்த வடிவமாயிருக்குமானுல் அந்த சச்சிதானந்தங்களுள் சத்தும் சித்தும் போல ஆனந்தம் எங்கும் விளங்குவதில்லையே சிலவிடங்களில் காணப்படுகின்றது. சிலவிடங்களில் காணப்படுவதில்லை. ஆதலின் ஆன்மா ஆனந்த வடிவினனென்பது எவ்வாறு பொருந்தும் என்று ஐயம் தோன்று

மாயின் அவ்வையத்தை நீக்க ஆனந்தம் எவ்வெவ்விடத்தில் எவ்வெவ்வாறு விளங்குகின்றது என்பதைக் கூறுகின்றார்.

வெப்பமும் ஒளியுமாயிருப்பது நெருப்பின் வடிவமாம். ஆயினும் அவை எல்லா விடங்களிலும் விளங்குவதில்லை. விளக்கில் ஒளிமாத்திரம் விளங்குகின்றது; வெப்பம் விளங்குவதில்லை. நீரில் வெப்பம் மாத்திரம் விளங்குகின்றது; ஒளி விளங்குவதில்லை. விறகில் வெப்பம் ஒளி இரண்டும் விளங்குகின்றன. அதுபோல, சத்து சித்து ஆனந்தம் இம்மூன்றும் ஆத்மாவின் வடிவமாக விருப்பினும் அவை எல்லாவற்றினும் விளங்குவதில்லை. கல் முதலியவற்றில் கல் இருக்கின்றது என்று சொலத்தக்கதாக ஆத்மாவின் சத்து ஒன்றே விளங்குகின்றது; மற்றவை விளங்குவதில்லை. தமோகுணத்தினால் அஞ்ஞான மயமாகவுள்ள புத்தியின் மூடவிருத்தியிலும் இராசத குணத்தினாலாகிய கோர விருத்தியிலும் நான் இருக்கிறேன் எனத்தக்கதாக சத்தும், நான் அறிகிறேன் என்னத்தக்கதாக சித்தும் விளங்கும். ஆனந்தம் விளங்குவதில்லை. சத்துவ குணத்தாலுண்டான சாந்த விருத்தியில் சத்து சித்து ஆனந்தம் மூன்றும் விளங்கும். ஆகையால் ஆன்மா ஆனந்த வடிவினதாம்.

## சத்தாதி யைந்தின் பேதம் சாற்றல்

அன்றியும் முற் கூறிய சத்து முதலாகிய ஐந்திற்கும் உபாதிகளுண்டு, அவ்வுபாதியால் அவை ஒன்றற்கொன்று பேத முடையனவாம். அவற்றின் பேதங்களைக் கூறின்,

(1) சத்து மூன்று வகைப்படும். அவை வியாவகாரிக சத்து, பிராதிபாசிக சத்து, பாரமார்த்திகசத்து என்பனவாம். அவற்றுள்,

(1) வியாவகாரிக சத்து:—"சுழுத்தியிற்றோன்றாது நனவுற்று முத்தியுறுமளவு முறுங்கடாதி முதலதுவாம்."

சுழுத்தியின்கண்தோன்றாமல் சாக்கிராவஸ்தையில் காணப்பட்டுவிதேக முத்தி யடையுமளவும் இருக்கின்ற கடம் முதலியவற்றின் இருப்பு வியாவகாரிக சத்தாம், (சத்து=இருப்பு) (ஆத்மா ஞானததால் பொய்யென நிச்சயித்தற்குரியது வியாவகாரிக சத்தாம்.)

(2) பிராதிபாசிகசத்து:—'கனவினிற் றோன்றி யழிவதுடையதுவாம்.'' சொப்பனவஸ்தையிற் றோன்றி யழியும் பொருள்கள் பிராதிபாசிக சத்தாம். (ஆத்மா ஞானமில்லாமலே பொய்யென்று நிச்சயித்தற்குரியது பிராதியாசக சத்தாம்.)

(3) பாரமார்த்திகசத்து:— "பொன்றாத பிரமசத்தே யிறுதியதாம்.'' எக்காலத்தும் அழிதலில்லாத பிரஹ்மமே பாரமார்த்திகசத்தாம். (எக்காலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படாதது பாரமார்த்திக சத்தாம்.)

---

"பாமாத்வா வென்னும் பாம்பு'' என்றார் ஓர் அடியார். அதெப்படி? பாம்பின் வாயில் விஷமுண்டு. அந்த விஷத்தை அது உட்கொள்ளுவதால் இறந்து போகிறதா? இல்லை. ஆனால் அவ்விஷத்தைப் பிறருண்டால் இறந்து போகின்றனர். அதுபோல் கடவுளிடம் அடங்கியிருக்கும் உலகத்திலுண்டாகும் நன்மை தீமைகளிரண்டும் அவரைச் சாருகிறதில்லை. இருவினைகளும் மனிதர்களைப் பீடிக்கின்றன, அவற்றை ஒழித்தால் வீடு பெறலாம்.




"போட்மெயில்" வந்து நின்றது. பிளாட் பாரத்தில் ஜனங்கள் கூட்டங் கூட்டமாக அங்கும் இங்கும் ஓடிக்கொண் டிருக்கிறார்கள். "திண்டுக்கல், திண்டுக்கல்" என்கிற கூச்சல்கள் ஒரு பக்கம், "கூலீ, கூலீ" என்கிற கூச்சல்கள் ஒரு பக்கம், "மெட்ராஸ் மெயில், ஜஸ்டிஸ், ஹிண்டு," என்ற கூச்சல்கள் ஒரு பக்கம், "திராவிடன்—தமிழ்நாடு—சுதேசமித்திரன் என்ற கூச்சல்கள் வேறொரு பக்கம், "பால்காபீ, பால்காபீ' என்ற கூச்சல்கள் இன்னொரு பக்கம்—அடிபிடியாக இருக்கின்றன. அவரவர்கள் பாடு அவரவர்களுக்கு.

ஒரு வாலிபன்—சுமார் இருபத்திரண்டு-இருபத்துமூன்று வயதிருக்கும், அவ்வளவு கருப்பு அல்ல; மாநிறம் என்று சொல்லலாம். உயரம் அல்ல-பொதுவாகக் குள்ளம் என்றே சொல்லவேண்டும். சிறிய முகம்; குறுகிய நெற்றி; மூக்கு சன்னம்—ஆனால் நீளம். சிறு கண்கள்; கொஞ்சம் குழிந்திருக்கின்றன. காதுகள் முகத்துக்குத் தகுந்தவை அல்ல; கொஞ்சம் பெரியவை. இவ்வளவு ஏன்? பொதுவாக அழகன் என்று கூற முடியாது. ஆனால் நல்ல "பேஷனபிள்" போர்வழி. அமெரிக்கன் கிராப்பு, டை, அப்-டு-டேட் சர்ஜிகோட், இங்கிலீஷ் டுவில ஷர்ட், 1703 நெ. மல்; காலில் டென்னிஸ் பூட்ஸ், கண்ணில் கண்ணாடி—இந்த வேஷத்தோடு விளங்குகிறான். முகத்தைப் பார்க்கும்போதே ஒரு விபரீதமான உணர்ச்சி உண்டாகும். சாமுத்திரிகம் தெரிந்தவர்கள், இவனைப் பார்த்து விட்டால், ஒரு விதமாய்ப் பரீக்ஷை செய்யாமல் விடமாட்டார்கள். பார்க்கப் பார்க்க மறுபடியும் கொஞ்சம் பார்க்கலாம் என்றே தோன்றுகிறது.

நெற்றியில் விழுந்துகொண் டிருந்த தலைமயிரை எடுத்துப் பின்னுக்கு நீவிக்கொண்டும், ரூல் தடி மாதிரி சுருட்டி வைத்திருந்த "நியூஸ்பேப்ப"ரால் தன் துடையில் தாளம் போட்டுக்கொண்டும், தன் சாமான்களின் பக்கமாகவே இங்கும் அங்கும் உலாவிக்கொண் டிருக்கிறான். வருகிற கூலியும் போகிற கூலியும் "சுவாமீ! சார்!" என்று கேட்டுக்கொண் டிருக்கிறார்கள். அந்த வார்த்தைகளை அவன் காதுகளிலுங்கூடப் போட்டுக் கொள்ளவில்லை. ரயிலும் நகர்ந்தது. பிரயாணிகளிலும் அநேகம் பேர் போய் விட்டார்கள்.

இதற்குள் ஒரு டவாலிபோட்ட சாஹிப் வெகு வேகமாக ஓடி வந்தான்.

சாஹிப்:—"மகராஜ்! சலாம்! இன்னைக்கி ரயிலு முந்தியே வந்துட்டுதுங்கோ. எஜமான், நீங்கோ 'இன்னைக்கி வர்ரார் ரயிலுக்கிப்போ"ன்னு

ராத்திரியே சொன்னாங்கோ. நானும் அவசர அவசரமா நாஷ்டாகூட பண்ணாமே ஓடி வர்ரேன் மகராஜ்."

வாலிபன், "மெயில் டைம் பிரகாரமே வந்தது" என்று சொல்லிக் கொண்டே பாக்கெட்டில் இருந்த டிக்கட்டை எடுத்துச் சேவகன் கையில் கொடுத்தான். சேவகன் கொண்டுபோய் டிக்கட் கலெக்டர் கையில் கொடுத்தான். பெட்டியையும் படுக்கையையும் கட்கத்தில் இடுக்கிக்கொண்டு சேவகன் முன்னாலே புறப்பட்டான்; வெளியில் போய் ஒரு ஜட்காவில் அவைகளை வைத்தான். இரண்டு பேரும் ஏறினார்கள். வண்டியும் புறப்பட்டது.

ஒரு கால்மணி நேரத்தில் வீடு சேர்ந்தார்கள். வாசலில் இவர்கள் வருகையை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்த மணியன் வண்டியைப் பார்த்ததும் உள்ளே போய் "அப்பா! வண்டி வந்து விட்டது" என்று சொல்லிவிட்டு, வீட்டுக்குள்ளே போய், ஒரு பெரிய செம்பில் தண்ணீர் கொண்டுவந்து வாசலில் படியின் மீது வைத்தான்.

மணியன்:—"வாருங்கோ அத்தான்!"

"வாலிபன்:—(புன்முறுவலோடு) "ஐயர்வாள் எப்போது வந்தாற்போல? சௌக்கியமாய் இருக்கிறீர்களா?"

மணியன்:—"முதலில் கைகால் அலம்பிக் கொள்ளுங்கள்; பிறகு பேசிக் கொள்ளலாம்."

வாலிபன் சாஹிப் பக்கம் திரும்பி "என்ன சாஹிப்! இந்தா வாடகை கொடுத்து அனுப்பு" என்று சேவகன் கையில் நாலணாக் கொடுத்துவிட்டு, கால்—முகம் கழுவிக்கொண்டு ஆபீஸ் அறைக்குள் போனான்.

சந்திரசேகர ஐயர் ஆபீஸ் காகிதங்களை மூடி, அவைகளை அப்படியே வைத்துவிட்டு ஒரு புன்முறுவல் செய்தார். அவருடைய பார்வையானது மிகுந்த அன்பின் அறிகுறியாகவும், அந்தப் புன்முறுவல் நல்வரவு கூறுவதாகவும் காணப்பட்டன. நமது வாலிபனுக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாயிற்று. ஐயர் ஒரு ஈஸிச்சேரைக்காட்டி "உட்காருங்கள்" என்றார். "பரவாயில்லை. எங்கே இருந்தால் என்ன!" என்று ஒரு பெஞ்சின் மீது உட்கார்ந்தான் வாலிபன்.

ஐயர்:—"என்ன விசேஷங்கள்? உடம்பு சௌக்கிய மாகத்தானே இருக்கிறது?"

வாலிபன்:—"ஆமாம்! சௌக்கியமாகவே இருக்கிறது."

ஐயர்:—"என் கடிதம் கிடைத்ததா?"

வாலிபன்:—ஆமாம்! கிடைத்தது. அதைப்பார்த்த பிறகுதான் புறப்பட்டேன்."

ஐயர்:—"மணியன் கூட நேற்றுத்தான் வந்தான். அவர்களுடைய காலேஜ் போன பிரைடே (Friday) தான் க்ளோஸ் செய்தார்கள்."

வாலிபன்:—"எங்களுடையதும் அப்போதுதான் க்ளோஸ் செய்தார்கள். கொஞ்சம் பர்ச்சேஸ் இருந்ததால் அவைகளைப் பார்த்துக்கொண்டு, இந்த மெயிலில் வந்தேன்."

இரண்டுபேரும் கொஞ்ச நேரம் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார்கள். இதற்குள் மணியன் உள்ளேபோய் மூன்று வெள்ளித் தட்டுகளில் உப்புமா கொண்டுவந்து ஒரு மேஜையை நடுவில் இழுத்துப் போட்டு அதன்

மீது வைத்தாள். கமலம் ஒரு வெள்ளிக் கூஜாவில் காபியையும், லோட்டாக்களையும் கொண்டு வந்து மேஜைமீது வைத்தாள்; லோட்டாக்களில் காபியை ஊற்றினாள். பாவம்! எத்தனை யோ மாதங்களாக விட்டுப் பிரிந்திருந்த காதலன் முகத்தை ஒருதரம் பார்க்க வேணும் என்ற ஆசை அவளுக்கு. ஆனால் என்ன செய்வாள்? அப்பாவாவது, அண்ணாவாவது, காதலனைத் தான் பார்க்கும் போது பார்த்துக்கொண்டால் என்ன நினைத்துக்கொள்ளுகிறார்களோ என்ற கூச்சம். ஆனால் காதல் வெள்ளத்துக்குக் கரைபோடுகிறவர்கள் யார்? எப்படியோ ஒருவகை ஏற்படுத்திக்கொண்டு, ஒருதரம் தன் உயிர்க்காதலன் மீது மோஹனாஸ்திரங்களை விட்டாள் கமலம். அந்தப் பார்வையினால் நமது இளங்காளைக்குப் புளகாங்கிதம் உண்டாய் விட்டது; முகம் மலர்ந்தது; கமலம் ஒரு சிறிய மந்தகாசத்தோடு வீட்டுக்குள் போய் விட்டாள்.

***

ராமகிருஷ்ணன் இன்டர்மீடியட் பாஸ் செய்திருக்கிறான். கலியாணம் ஆனபிறகு அவனுக்குள்ளே ஒரு மாறுதல் ஏற்பட்டது. என்ன என்பீர்களோ? மாமியார் வீட்டில் தன் கௌரவத்தைக் காப்பாற்றிக்கொள்ள வேணும் என்றால், அவர்களுக்குச் சமானமாகப் படித்துக்கொள்ள வேணும் என்பதே.

இவனுக்கு நான்கு சகோதரர்கள் இருக்கிறார்கள். செல்வத்துக்கு ஒன்றும் குறைவில்லையே யொழிய ஒருவனாவது முன்னுக்கு வரவில்லை. இதற்குக் காரணம் தகப்பனாருடைய பீனாசிக்குணமே—பணம் என்றால் உயிரை விட்டு விடுவார். இனி ராமகிருஷ்ணனுடைய ஆசை எப்படி நிறைவேறப் போகிறது? ராமகிருஷ்ணனும் பிடிவாதக்காரன். ஆறு நூறானாலும், நூறு ஆறானாலும் மற்றவர்கள் தன் கோரிக்கைப் பிரகாரம் நடந்து தீரவேண்டியதே யொழியத் தான் மாத்திரம் அணுவளவும் விட்டுக்கொடுக்க மாட்டான். ஒரு பிடி பிடித்தால் அது உடும்புப் பிடிதான். இந்த மாதிரியான சமயங்களில் இன்னொருவருடைய நல்ல வார்த்தைக்கும், சமாதானத்துக்கும் மரியாதைக்கும் அவனிடம் இடம் கிடையாது. பிடித்ததைச் சாதித்தே தீருவான். தகப்பனாரைத் தலை கீழாக்கிக் கிறுகிறுக்கச் செய்துவிடுவான். அவரும் லேசான பேர்வழி அல்ல. மகன் மேலே படிக்க வேணும் என்று சொன்ன

காலத்தில் "போதும், போதும் இவ்வளவு படிப்பு! இனி மரியாதையாக இருந்து வேலையைப் பார்" என்று ஒரே அடியாக மறுத்து விட்டார். பெரிய விடத்தில் சம்பந்தம் செய்திருக்கிறோமே, சம்பந்தியும் மற்றவர்களும் என்ன நினைப்பார்கள் என்ற கவலை அவருக்கு அணுவளவும் இல்லாமல் போய் விட்டது. பிறகு யாரோ ஒரு சப்கலெக்டர் கிராமத்துக்கு வந்திருந்தபோது பையனைச் சும்மா வைத்திருக்கக் கூடாது என்று வற்புறுத்தியதும், "இதென்ன தரித்திரம் பிடித்து விட்டதா?" என்று ஊரார் ஏசியதும், நமது ராமகிருஷ்ணன் ஒரே பிடிவாதமாய் தினசரி கிளர்ச்சி செய்து நிகழ்த்திவந்த போராட்டமும் ஒன்று சேர்ந்து, எப்படியோ ஒரு வகையில் அவரைப் பிறகு ஒப்புக் கொள்ளச் செய்து விட்டன.

ராமகிருஷ்ணன் சென்னையில் மெடிகல் காலேஜில் இரண்டாவது வருஷத்தில படித்துக்கொண் டிருக்கிறான். இவனுக்குச் சாந்தி முகூர்த்தம் நடந்தது போன வெய்யிற்கால விடுமுறையில். ஆனால் உடனே ஜூலையில் காலேஜுக்கு வந்துவிட நேரிட்டது. இதிலிருந்து தப்பிக்க முடியுமா என்ன? சென்னைக்குப் போனான். அங்கே போனது முதல் மநுஷனுக்கு அவ்வளவாக உற்சாகம் இல்லை. ஆலோசனை பெருகி விட்டது. தினந்தோறும் "தபால்காரன் எப்பொழுது வருவான்" என்று காத்துக்கொண் டிருப்பது தான் வேலை. காதலியினிட மிருந்து கடிதம் வந்தால் என்ன பதில் எழுதுவது என்பதில் ஆலோசனை; வராவிட்டால் கோபம்; பிறகு குழப்பமும் திகிலும்! எப்படியோ ஒரு தினுசாக இரண்டு மாதங்கள் தொலைந்தன. "கிறிஸ்மஸ்" விடுமுறையும நெருங்கி விட்டது. இப்பொழுது ஒரு பெரிய சந்தேகம் வந்து கழுத்தை முறிக்கிறது. "மாமனார் அழைப்பு அனுப்பாமல், மருமகன், மாமியார் வீட்டுக்குப் போகலாமா?" என்று பத்துப் பதினைந்து நாட்களாகத் தர்க்க ரீதியாய் வாதப் பிரதி வாதங்கள் நிகழ்த்திக் கொண்டிருக்கிறான் தனக்குள்ளேயே. "மாமனார் அழைக்கிறது என்ன? நம்ம பொருள் அங்கே இருக்கிறவரை ஒருவருடைய கட்டளை அநாவசியம்" என்று முடிவாகச் சித்தாந்தம் செய்துவிட்டான். இதற்குள் ரொட்டி நழுவி நெய்யில் விழுந்த மாதிரி—ஆக தாளியமாய் மாமனாரும் அழைப்பு அனுப்பி விட்டார். இரண்டு நாளில் விடுமுறை. இனிச் சந்தோஷத்துக்கு ஏதாவது கங்கு கரை இருக்குமா என்று நீங்களே கொஞ்சம் யோசனை செய்து பாருங்கள்.

மாமியார் வீட்டுக்கு வந்தான். இனிமேல் சொல்லவா வேணும்? "ஸ்வஸுரக்ருஹம் ஸ்வர்க்க துல்யம்.' இரண்டு மூன்று நாள் மாமியார் வீட்டில் இருந்துவிட்டு ஊருக்குப் போகலாம் என்று எண்ணிக்கொண் டிருந்தான். நாட்கள் கழிந்தன. வாரங்களில் விழுந்தது கணக்கு! தகப்பனரிடம் போனாலொழிய பட்டணத்துக்கு மூட்டை கட்ட வகையில்லை. விடுமுறை நாட்கள் எல்லாம் தீர்ந்து போயின. மேலே இரண்டு நாட்களும் அதிகம் ஆகிவிட்டன. கமலத்தோடு சொல்லிவிட்டு அடுத்த நாள் புறப்படலாம் என்று நினைத்துக்கொண் டிருக்கிறான். சாந்தி முகூர்த்தம் சமீபத்திலேயே நடந்திருக்கிற படியால், புருஷன்—பெண்சாதி பகலில் பேசிக்கொள்ளுவதற்குப் பயம்! யார் பார்த்து என்ன நினைத்துக் கொள்ளுகிறார்களோ என்று!

இரவு பத்துமணி ஆயிற்று. வீட்டில் எல்லாரும் படுத்துக்கொண்டார்கள். ராமகிருஷ்ணனுக்கு கமலம் தாமதமாய் வருவது இஷ்டம்

இல்லை, ஆத்திரமும் கோபமும் அதிகரித்து விட்டன. வந்தால் பேசக் கூடாது என்று தீர்மானித்துப் படுத்துக் கொண்டான். மனதில் புழுங்கிக் கொண்டிருக்கிறான். இதற்குள் கமலம் தயாராளுள்; மெட்டி சப்தம் கேட்டது. தூங்குவதாக நடித்துக் குரட்டைபோட ஆரம்பித்தான். கமலத்துக்கு இது பதிதல்ல. தலைப்பக்கமாகக் கட்டிலோரம் நின்றுகொண்டு "இதோ வெற்றிலை போடுங்கள்" என்றாள். பதில் இல்லை.

கமலம்:—"அடே அப்ப! இதற்குள்ளே தூக்கமா? எவ்வளவு திருட்டுத்தனம்! எல்லாம் எனக்குத் தெரியும் சும்மா எழுந்திருங்கள்" என்று வாசனைப் பாக்குத் தூளை வாயில் கொட்டப் போனாள். ஆனால், வாய்திறக்கவில்லை. "சும்மா பிடிவாதம் பண்ணுதீர்கள்! இப்போது நான் செய்து விட்டேன். ஒன்றும் இல்லாததற்கெல்லாம் இவ்வளவு கோபமா?" என்றாள். ராமகிருஷ்ணன் மூச்சுவிட வில்லை.

கமலம்:—"இதோ நான் ஆணை வைக்கிறேன். என்னைக் கொன்ற மாதிரி......இனிப் பேசாமல் போனால்"

ராம:—"உஸ்—என்ன?—கூச்சல்—தூங்கும்போது."

கமலம்:—பாக்குத் தூளை வாயில் கொட்டினாள். பக்கத்தில் உட்கார்ந்து மேலே சாய்ந்து கொண்டு, மெல்லக் கால்களைத் தொட்டுத் தொட்டுப் பார்த்து "மிகவும் களைத்துப் போனாற்போல இருக்கிறது. சாயங்காலம் எங்கே போனீர்கள் அவ்வளவு நேரம்? முகம் நிரம்ப வாடியிருந்ததே வீட்டுக்கு வரும்போது! அவ்வளவு வெய்யிலில் ஏன் போகவேணும்?

ராம:—"எங்கும் போகவில்லை. சும்மா "வாக்கிங்" போயிருந்தேன். லீவ் எல்லாம் தீர்ந்தது. நாளைக்குப் புறப்படலாம் என்றிருக்கிறேன்.

கமலம்:—"எங்கே?"

ராம:—"எங்கள் ஊருக்கு"

கமலம்:—"இப்பவே என்ன அவசரம் வந்தது? மூன்றாம் நாள் தானே நீங்கள் வந்ததுங்கூட!" என்று சொல்லிக்கொண்டே கொஞ்சம் மேலே நகர்ந்து வெற்றிலையை வாய்க்குள் வைத்தாள்.



ராம:—"நீ வெற்றிலை போட்டுக்கொண்டாயா?"

கமலம்:—"போட்டுக் கொள்ளுகிறேன்"

ராம:—"இவ்வளவுநேரம் என்ன செய்தாய்?"

கமலம்:—"சமையல் அறையில் எல்லாம் ஒழுங்கு செய்துவிட்டு, அப்பாவுக்கு வெற்றிலை கொடுத்தும் இப்படியே வருகிறேன்."

ராம:—(கமலத்தின் வளையல்களைத் தொட்டு அசைத்துக் கொண்டே) "ஊருக்குப் போகலாம் என்று நினைத்ததிலிருந்து மனதுக்குள் என்னமோ போலிருக்கிறது. ஒன்றும் தோன்றவில்லை."

கமலம்:—"இப்போதே போகாதீர்கள் நீங்கள் "போகிறேன்" என்றால் எனக்கு நெஞ்சில் கல்லைத் தூக்கி வைத்த மாதிரியிருக்கிறது. எத்தனையோ நாள் வருவீர்கள் வருவீர்கள் என்று காத்துக்கொண்டிருந்த பிறகு, இப்போது வந்தீர்கள்."

ராம:—"ஆமாம்! உன் சக்கதி எனக்குத் தெரியுமே! எத்தனை கடிதம் எழுதினாலும் பதிலே எழுதமாட்டாய்."

கமலம்:—"அப்படிச் சொல்லாதீர்கள். எப்பொழுதம்மா நான் எழுதாமல் சும்மா இருந்தது! உங்களிடமிருந்து கடிதம் வராத போனால்தான் எனக்குத் தூக்கமே பிடிக்காது! நான் சொன்னால் நம்புவீர்களா? இந்த மத்தியில், "என் இளைத்துவிட்டாய் நாளுக்கு நாள்? புருஷன் மீது பைத்தியம் போலிருக்கிறது" என்று எல்லாரும் கேலி செய்தார்கள்."

ராம:—"ஆனால் உடம்புக்கு ஒன்றும் இல்லை அல்லவா?"

கமலம்:—"உடம்புக்கு என்ன வந்தது? விசனம்தான். எனக்கு என்ன குறை இங்கே இருக்கிறவளுக்கு? நீங்கள் உங்கள் உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளவேணும். அந்தப் பட்டணத்தில் என்ன சாப்பாடு கிடைக்கும்? வெறும் சோறும், பருப்பும் சாம்பாருந்தான். நெய் பூஜ்யம்! அந்தச் சாப்பாடு சாப்பிட்டால் நோய் வராமல் என்ன செய்யும்? பாழும் பணத்தைப் பார்க்காமல் சாப்பாட்டுக்கு ஒழுங்கான ஏற்பாடு செய்துகொண்டால் நன்றாயிருக்கும். அவ்வளவு தூர தேசத்தில் இருக்கிறீர்கள். அடிக்கடி வந்து போவதற்கும் கையிலேலை. அங்கே ஏதேனும் உடம்புக்கே ஒன்றுவந்தால் பார்ப்பதற்கு யார் இருக்கிறார்கள்? இதேதான் எனக்கு எந்நேரமும் ஆலோசனை—விசனம்."

ராம:—"உடம்பை ஜாக்கிரதையாகவே பார்த்துக்கொண்டிருக்கிறேன். ஆனால் உன்னைவிட்டுப் பிரிந்திருக்கிறதுதான் எனக்கு நோய். ஒரு இரவாவது தூக்கம் பிடிக்கவேணுமே, கிடையாது. எப்பொழுதும் என் கண்களுக்கு எதிரில் வந்து நின்றுகொண்டே இருந்தாய்."

கமலம்:—"என்னையுங்கூட அழைத்துக் கொண்டு போகக்கூடாதா?"

ராம:—"அநேக சிக்கல்கள்—சங்கடங்கள் இருக்கின்றன."

இந்த மாதிரியே காதலர்களுக்குள் நடு இரவுவரை சம்பாஷணை நடந்தது. போகப் போகப் பிரிவாற்றாமைத் துன்பம் வளர்ந்துவிட்டது.

யார் வாயிலிருந்தும் வார்த்தை வரவில்லை. பெருமூச்சுகள் மிகுந்துவிட்டன. ராமகிருஷ்ணனுடைய கண்ணிலிருந்து கமலத்தின் கைமீது ஒரு நீர்த்துளி விழுந்தது. கமலம் சரேலென்று எழுந்து காதலனுடைய கண்களைத் துடைத்தாள். இருவருக்கும் துக்கம் பொங்கிவிட்டது. ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் கொண்டார்கள். இவர்கள் அன்று இரவு அது

பவித்த பிரிவுத்துன்பத்தை வருணிக்கக் கம்பனுக்கும் காளமேகத்துக்குங் கூடச் சாத்தியமோ இல்லையோ என்பது சந்தேகம்.

***

எப்போதாவது பட்டணம் பார்க்காதவர்களுக்குச் சென்னைமா நகரைப் பார்க்கும்போது விசித்திர உணர்ச்சி தோன்றும் என்பதில் சந்தேகம் இல்லை. அதிலும் சாயங்காலம்—மாலை நேரத்தில் ரயிலைவிட்டு இறங்கவேணும்! சென்ட்ரல் ஸ்டேஷன் பக்கம் வந்தும் வராததற்கு முன்பே, பெரிய பெரிய மாளிகைகள், தொழிற்சாலைகள், ட்ராம்கள், பஸ்கள், கார்கள், வண்டிகள் முதலியவற்றை மின்சார விளக்குகளின் முன்பு பார்க்கும்போது நெஞ்சு தட தட என்று அடித்துக்கொள்ளும். ட்ரெயினை விட்டு இறங்கியும் இறங்கு வதற்கு முன்பே எமபடர்களைப் போல, கூலிகளும், ஜட்காவாலாக்களும் சூழ்ந்து கொண்டு உயிரைப் பிடுங்கி விடுவார்கள்; அவர்களைச் சமாளிப்பதற் குள்ளே மூச்சுத் திணறிப்போகும். ஏதோ ஒரு வகையில் தட்டுத்தடுமாறி பஸ்ஸிலோ, காரிலோ விழுந்து திருவல்லிக்கேணிக்கு வந்தால் "விக்டோரியா ஹாஸ்டல்" கேட்டுக்கு முன்பு வந்து நிற்கும். அங்கே நின்று வடக்கே நோக் கினால் மைதானம் சூழ்ந்த மரங்களினூடே விளங்குவதே ஹாஸ்டல்; மாண வர் தங்கும் அறைகளும தெரியும். அது மூன்றடுக்கு மாளிகை. மேலே போவதற்கு நான்கு பக்கங்களிலும் படிகள் இருக்கின்றன. மூன்றாவது அந் தஸ்தில் அக்கினி மூலையில் இருப்பதே ராமகிருஷ்ணனுடைய அறை.

அறைக்குள் நுழையும்போதே அதில் "மெடிக்கல் ஸ்டூடன்ட்" இருக்கி றான் என்பது நன்கு தெரிந்து கொள்ளலாம். ஒரு மேஜையின் மீது ஒரு மண்டை ஓடு—சில எலும்புகள், ஒரு பீரோ நிறைய மருந்து புட்டிகள், இதர சாமான்கள், ஏராளமான புஸ்தகங்கள் முதலியவை இருக்கின்றன. தெற்குப் பக்கம் ஜன்னலோரம் "கேம்ப் காட்டு"—அதற்குக் கீழே ஐந்தாறு ஜோடி பூட்ஸ், தலைபாகை மாட்டியில் அநேக விதமான காலர்கள், சாக்ஸ் எல்லாம் இருக்கின்றன. இது ஒரு சிறிய கடையைப் போல் விளங்குகிறது.

நடுவில் மேஜைக்குப் பக்கத்தில் ஈஸிச்சேரில் ராமகிருஷ்ணன் உட் கார்ந்திருக்கிறான். புஸ்தகம் விரிந்து நெஞ்சின் மீது விழுந்து கிடக்கிறது. ஏதோ ஆலோசனையில் மூழ்கியிருப்பது போல் காணப்படுகிறான்.

இதற்குள் ஒரு நண்பர் வந்து "என்ன? என்ன செய்துகொண் டிருக்கி றீர்கள்?" என்றார்.

ராம:—"ஒன்றும் இல்லை; வாருங்கள்."

நண்பர்:—"காலேஜுக்குப் போகவில்லையா என்ன? இன்னும் சாப் பிட்டதாகத் தெரியவில்லையே. டைனிங் ஹாலில் பார்த்தேன் காணவில்லை; ஒருவேளை இங்கே இருப்பீர்களோ என்னவோ என்று பார்த்து விட்டுப் போகலாம் என்று வந்தேன்."

ராம:—"ஆமாம்! உடம்புக்கு இன்று கொஞ்சம் அசௌகரியமாக இருக் கிறது. இப்போது தான் படுக்கையை விட்டு எழுந்தேன். காபி ஆயிற்று. சாப்பாட்டுக்கு மேல் காலேஜுக்குப் போகும் விஷயத்தை யோசிக்கலாம் என்றிருக்கிறேன்."

(தொடரும்)




## "சுத்த வீரர்கள்."

இரண்டு மல்ல ஜட்டிகள் தங்கள் தங்கள் சாமர்த்திய—வீரப் பிரதாபங்களைப் பகிரங்கப்படுத்த அம்பலத்துக்கு வந்துவிட்டார்கள். ஆனால் இரண்டு பேருக்கும் வெகு நாளைய பகை! களத்தில் வந்து நின்று கொண்டு முதலில் ஒருவருக் கொருவர் "பஞ்சா"க் கொடுத்துப் பலங்களைப் பரிசோதனை செய்து கொள்ளும்போது முதலாவது பேர் வழி வலதுகை மணிக்கட்டை இடுப்பில் வைத்துக்கொண்டு-- இடது கை முஷ்டியை இறுக்கி மடக்கி, எதிரியின் மூகத்துக்கு நேராக வைத்துக் கொண்டு சொல்லுகிறான்: "ஓய்! நம்மகிட்ட எல்லாம் ஒரே அடிதான்! அந்த ஒரு அடியிலேயே வீட்டுக்கு ஓடிப் போய் ஒண்ணரைக் குடம் தண்ணி குடிக்கவேணும், தெரியுமா?"




இரண்டாவது பேர்வழி:—(பல்லை நெறுநெறு என்று கடித்துக் கொண்டு) அந்தப் பப்பு வேகாது. நம்மகிட்ட எல்லாம் ஒண்ணுக்கு ரெண்டு. இனிப் பேசினால் உபத்திரவத்துக்கு மூன்றும் கூட. நான் கொடுக்கிற ஒரு அடியில் மண்டை வெற்றிலை பாக்குப் போட்டுக் கொண்டு—கீழே விழும் போது பூமியும் ஒரு அறைச்சல் கொடுத்து மண்ணைக் கவ்வ வைத்துவிடும் ஜாக்கிரதை!

***

## "திருப்தி"

இரக்கம் உள்ள பெரியவர்:—"என்ன அப்பனே! சதா சர்வ காலமும் தேசம் எல்லாம் சுற்றி, பிச்சை எடுத்து உண்பதில், உனக்குத் திருப்தியாகவே இருக்கிறதா?"

பிச்சைக்காரன்:—இல்லை தருமராஜா! ஒரு கார் இருந்தால் நல்லது என்று அநேகதடவை ஆசைப்பட்டது உண்டு."

## " மஹானுபாவன் "

ஒரு பிரபு தம் வீட்டில் நிகழ்ந்த ஒரு விசேஷத்தை முன்னிட்டு பிராமணர்களுக்கு ஒவ்வொரு ரூபாய் சம்பாவனை கொடுத்தார். அதில் ஒரு பிராமணனுக்குப் படு பேராசை பிறந்து கோபம் வந்து விட்டது. அப்போது பிரபுவை அலட்சியமாயும் எரிச்சலாயும் பார்த்து அந்தப் பிராமணன் கூறுகிறான்.



"நீ என்ன ஐயா! பிரமாத தருமம் பண்ணிவிட்டாய் படிப்பில்லாத — நீச—சண்டாள—முட்டாள் பையல்களுக்கும் ஒரு ரூபாய் கொடுத்து, "ஆத்மஸ்துதி—பரநிந்தை" செய்யாத மகானுபாவனுகிய எனக்கும் ஒரு ரூபாய் கொடுத்துப் போகச் சொல்லுகிறாயே—என்ன நியாயம் இது ? புண்ணியமா உனக்கு."

***

## " பைத்தியம் தெளிந்து விட்டது."

பைத்தியகார ஆஸ்பத்திரியிலிருந்த தம் நண்பனைப் பார்த்துவிட்டு வரலாம் என்று ஒருவர் அங்கே போயிருந்தார். அந்த நண்பன் தான் நன்றாயிருப்பதாகவும், பெரிய டாக்டரிடம் இந்த விஷயத்தைச் சொல்லித் தன்னை விடுவிக்க வேணும் என்றும் கேட்டுக் கொண்டான். அங்கே போயிருந்தவர் அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்வதாக வாக்களித்தார்.

பைத்தியம்:—" நீங்கள் மறந்துடக் கூடாது."

வந்தவர்:—"ஓ! இல்லே, இல்லே !"

பைத்தியம்:— " நிச்சயமாய் மறக்கமாட்டீர்கள் அல்லவா ?"

" உண்மையில் நிச்சயமாய் மறக்கமாட்டேன்"



இவ்விதம் சொல்லிக்கொண்டே வந்த மனிதர் போகலாம் என்று திரும்பும்போது, இடுப்பில் பலமான உதை விழ ஐந்தாறு முழத்துக்கு அப்பால் போய் விழுந்தார்.

பைத்தியம்:—(சிரித்துக் கொண்டு) மறந்தால் இதுதான் கிடைக்கும் என்று முதலில் சும்மா தெரிவித்தேன். மறக்கக்கூடாது தெரியுமா?

***

### "கிருகப்பிரவேசத்தில் மங்களகரம்."

ஒரு ரெட்டியார் புதுவீடு கட்டி கிருகப்பிரவேசம் செய்தார். இந்த விசேஷத்தை நடத்திவைக்க அந்த ஊர் புரோகிதர் தம் சிடனோடு வந்திருந்தார். ரெட்டியாரும் அவருடைய ஸ்தூல தேகம் படைத்த மனைவியும் பலகைகளில் வந்து உட்கார்ந்தார்கள். காரியம் முடிந்தது. இரண்டு பேரும் எழுந்த பிறகு ரெட்டியாரை அழைத்துச் சிடன் கூறுகிறான்:

"என்ன ஐயா! வாயில் கதவு நிலவுகளைக் கொஞ்சம் விசாலமாக வைத்திருக்கக்கூடாதா? உங்கள் மனைவியின் தேகமோ ஸ்தூலம். ஒரு வேளை காலஞ் சென்றுவிட்டால் சவம் இந்த வழியில் நுழையுமா? ஆகையால் இந்த வாயிலைக் கொஞ்சம் விசாலப் படுத்துங்கள்.

இந்த இதோபதேசத்தைக் கேட்ட ரெட்டியாருக்கு மிகவும் கோபமும் வருத்தமும் பிறந்து, சிடனைக்கண்டித்து வைக்கவேணும் என்று புரோகிதரிடம் முறையிட்டார்.

புரோகிதர்:—(சிடனைக் கோபத்தோடு பார்த்து) அடே மூர்க்கா! சண்டாளப்பையலே! இந்தமாதிரி முட்டாள் தனமான அதிகப்பிரசங்கம் உனக்கு எதற்காக? ஏதாவது ஒரு பக்கம் சுவரை இடித்தோ அல்லது சவத்தைத் துண்டு துண்டாக நறுக்கியோ-எப்படியோ ஒரு வகையில் வெளியில் எறிந்துவிடுவார்களே யல்லாமல், வீட்டுக் குள்ளேயே வைத்துக்கொள்ளுவார்களா? உனக்கு எங்கிருந்தடா இந்தப் பைத்தியம் வந்தது?"

இந்த அமுத்தம் திருத்தமான கண்டனத்தைக் கேட்டு, வந்திருந்தவர்கள் எல்லாரும பரம சாதுக்களான குரு—சிஷியர்களின் கல்வி, கேள்வி, விவேகங்கள் சமமாகவே இருக்கின்றன என்று மெச்சிக் கொண்டார்கள்.

***

### "ஆபரேஷன்"

வைத்தியன்:—"நான் சமீபத்தில் பெரிய ஆபரேஷன் செய்தேன்"

நண்பன்:—"என்ன வியாதி?"

நண்பன்:—"ஒரு குடலில் சதை வளர்ந்திருந்தது"

நண்பன்:—"நோயாளி இப்போது எப்படியிருக்கிறான்?"

வைத்தியன்:—"எப்படியிருக்கின்றான் என்பது என்ன? அப்போதே கைலாசம் கண்டுவிட்டான்."

## "பிரத்தியக்ஷ ஞானம்."

ஒரு வாத்தியார் காற்றை அடைப்பது எப்படி என்று தம் வகுப்புப் பிள்ளைகளுக்கு விளக்கிக் கொண்டு தமது பைசைக்கிளை வகுப்பு அறையில் உருட்டிக் காட்டிக்கொண்டிருந்தார். அப்போது,

வாத்தியார்:—(முன் சக்கரத்தைக் காட்டி) இந்த மேல் கவருக்குள்ளே ஒரு பிதுங்கும்படியான சக்தி இருக்கிறது அது என்ன என்று யாராவது தெரிவிப்பீர்களா?



ஒரு பையன்:—"இந்திய ரப்பர் சார்!"

"இல்லை, நன்றாய் யோசனை செய்து சொல்"

ஒவ்வொரு மாணவனும் ஒவ்வொன்றைச் சொன்னான். எல்லாம் தப்பு. கடைசியில், சக்கரத்தை நெருங்கி என்னமோ பரிசோதனை செய்துகொண்டிருந்த ஒரு சிறு பையன் வாத்தியார் பக்கம் திரும்பிச் சொல்லுகிறான்:

"உள்ளே இருப்பது என்ன என்று எனக்குத் தெரியும் சார்! அது வெறுங் காற்று. நான் இப்பொழுதுதான் ஒரு ஊசி எடுத்துக் குத்தினேன்! எல்லாம் வெளியே வந்துவிட்டது சார்!"

***

## "தவறு"

எஜமானன்:—"கடிதம் தபாலில் போட்டுவிட்டாயா?

வேலைக்காரன்:—"ஆமாம்! போட்டுவிட்டேன்; ஆனால் நீங்கள் ஒரு தவறுசெய்துவிட்டீர்கள்:— அணச்சீட்டு ஒட்டவேண்டியதற்கு இரண்டணாச் சீட்டும், இரண்டணாச் சீட்டு ஒட்டவேண்டியதற்கு அணச் சீட்டும் ஒட்டிவிட்டீர்கள்.

எஜமானன்:—"அடடே! பிறகு நீ என்ன செய்தாய்?

வேலைக்காரன்:—விலாசங்களை அடித்து விட்டு, ஒன்றின் விலாசத்தை இன்னொன்றில் எழுதி விட்டேன்.

***

## "சுகம்"

எஜமானி:—"இதுவரையில் இருந்த வீட்டைவிட்டு என் விலகி விட்டாய்?"

வேலைக்காரி:—"அவர்கள் குழந்தைகளுக்குத் தண்ணீர் ஊற்றவில்லை என்று விலக்கிவிட்டார்கள்."

குழந்தைப்பெண்:—"அம்மா! இந்தப் பெண்பிள்ளையை சேர்த்துக்கொள். நான் வெடுக்கென்று சுகமாயிருப்பேன்."—வி. ரா.




# ஸ்ரீ இராமரும் காந்தியும்.

(ஸ்ரீமதி. அசலாம்பிகை அம்மையார்.)

1930௵ மார்ச்சு௴ 12௳ புதவாரம் காலை 6-45-க்கு மகாத்மாகாந்தியடிகள் ததீசியாசிரமமாகிய சபர்மதி ஆசிரமத்தினின்றும், சாத்வீக எதிர்ப்பினைச் செயலில் ஆற்ற 79-தொண்டர் படையுடன் புறப்பட்டு பண்டை முறைப்படி பாதசாரியாக கிராமங்கள் பலவற்றிலும் தங்கித்தங்கி ஆண்மையறவுரைச் சொன்மாரி பொழிந்து செல்லும் காட்சியைக் காணவும் கேட்கவும் பேறுபெற்ற பத்திரிகா நிருபர்களுக்கு இராமன் பிராட்டியோடும் வனவாசத்திற்குப் புறப்பட்ட தோற்றமே நினைவிற்கு வருகிறதென்பது அவர்கள் வரைந்து விடுக்கும் நிருபங்களால் இனிது விளங்குகின்றது. ஊசி செல்லும் வழியேகும் நூலிழை போன்றொழுகும் உத்தம வுயர்குணப் பத்தினியாராகிய ஸ்ரீமதி கஸ்தூரிபாய் அம்மையோடும் இடையில் நர்மதா நதியில் படகிவர்ந்த காட்சியும் இராமரும் சீதையும் கங்கையிவர்ந்த காட்சியையே உவமிக்கச் செய்கின்றது. இவ்விருவர் மாட்டும் உலகம் காணும் ஒருமைப்பாட்டினை ஒரு சிறிது ஆராய்வோம்.

**தசரத புத்திரர்— கரம் சந்திரரின் காதல் மைந்தர்**

தசரத புத்திரர் தந்தை சொற் காத்தலின் பொருட்டே அரச போகத்தைத் துறந்தார்; தாய்சொற்காத்தலின் பொருட்டு வாலிப உள்ளத்தைக்கட்டி அடக்கியாண்டு தியாக மூர்த்தியானார்; தாய் என்னும் மொழி பெண்மையையுணர்த்துவதால் பெண்ணின் பேரறிவு, உரிமை, கடமை இவைகளைப் புறக்கணித்த இடைக்கால வழக்கினுக் கேற்ப அரசினை யாவினை வணங்குதல் போல் வணங்குவதற்கே தாய் உரியவளன்றி புத்திகேட்பதற் கன்றென வரைந்து வைத்த ஒரு தலைத் தீர்மானத்தில் உள்ள அநீதியைக் கடிந்து நல்லறிவுடைய தாய் மொழியினையே தலையாலேற்று நடந்து அதன் பயனாக அகில வுலகமும் தன்றாள் வணங்கத் திகழ்கின்றார் காந்தியடிகள் என்பது கண்டு குறிப்பிடத்தக்கது. கௌஸல்யா மைந்தன் தபோநிதியாகிய வஸிஷ்ட மகரிஷியின் பால் கலை பயின்று வேதாந்த மர்மமாகும் நிவர்த்தி மார்க்க உபதேசங்கேட்டு சாதுக்கள் இணக்கம் பெற்று எவ்வுயிர்க்கும் அன்புபூண்டு கருணைக்கடலாக விளங்கினார்.

புத்திரீபாயின் புத்திரரத்தினமோ பிரவர்த்தி மார்க்கத்திற்கே பிறப்பிடமாகிய ஆங்கிலநாடு சென்று ஒழுக்க மறியா நடையும், தூய்மை கலவா வுணவும் முறை கருதா வின்பமும், பயன் தராததும், கட்டில் அடங்காததுமாகிய களியாடல்களும் ததும்பிப் பொங்கிய கூட்டங்களிலேயே வதிந்து பயின்றும் அவைகளில் உள்ளந்தோயாது கசந்து, வெறுத்துத் தள்ளித் தனது

இயற்கை யறிவால் தூய்மை காத்துச் சத்திய தரிசனராய் ஞானபானுவாய் வெளியேறினார்.

கற்பென்பது பெண்பாலார்க்கே யுரியதெனச் சில சுயநல ஆடவர் கூறும் கொள்கையை பிடித்துத் தள்ளி, கற்பு ஆண்பாலார்க்கும் இன்றியமையாத தென்னும் உண்மையை இருவரும் ஒரு முகமாய் நிலைநிறுத்தினர்; இராமர் மணம் காதலை யடிப்படையாகக் கொண்டது—காந்திமணம் கற்பை யடிப்படையாகக் கொண்டது. இராமசரித நிகழ்ச்சியோ வெளித் தோற்றத்தில் மாயமானை வேண்டிய பிராட்டியாரின் மனதைத் திருப்திப் படுத்து முகத்தால் எழுந்தது—காந்தி சரிதமோ பகிரங்கமான சுயநிர்ணயத் தியாகத்தினுல் விரிந்தது. இராமரோ தந்தையால் ஏவப்பட்டு தவவேடம் புனைந்தனர்—காந்தியோ எவராலும் ஏவப்படாமல் அநீதியை யழிக்கவும் நீதியை நிலை நிறுத்தவும் பரந்த இரக்கத்தினுல் எல்லா நலமும் துறந்து நிற்பவர். இராமரோ கோதண்டம் தாங்கி சாபானுக்கிரக சக்தியுடைய முனிவரர்களால் அளிக்கப்பட்ட பற்பல தேவதாஸ்திரங்களையும் பெற்றுப் பகையிருள் கடிந்தார்—காந்தியோ, நிராயுதபாணியாய் உண்மைக் கவசம்பூண்டு உறுதிவாளை புனைந்து அஹிம்ஸையாகிய ஆத்மசக்தியினுல் உலகினையே ஸ்தம்பிக்கச் செய்கின்றார். இராமரோ வனவாசத்தில் மனைவியோடிருந்து தவநிலை யொழுகினார்—காந்தியோ நகரவாசத்திலிருந்தே இன்பவுணர்ச்சிக் காளாகாமல் திட சித்தத்துடன் செந்நெறி பயின்றார். கொன்றவன் தோற்றவன் கொல்லப்பட்டவன் வென்றவன் என்பது இருவரின் ஒருமைத் தீர்மானமாகும். தன்னை நம்பிய நண்பன் பொருட்டு மறைந்து நின்று அம்பேவினார் இராமர்—தனனைத் தந்த கடவுளே கூறினும் மறைந்தோ, அஞ்சியோ அறங்கடந்தோ எவ்வினையும் ஆற்றாதவர் காந்தியடிகள். குற்றம் புரிந்தோரைத் தண்ணளிபெய்து திருத்தி ஏற்றுக்கொள்ளல் வேண்டுமென்பதே யிருவர் துணிபும். கௌஸலை தனயன் யௌவனத்தில் ஏற்ற தவக்கடனை யௌவனத்திலேயே முடித்தார்—கூர்ஜர வேந்தரோ யௌவனத்திற்கொண்ட தவநிலை மூப்பெய்திய இஞ்ஞான்றும விடுத்தாரில்லை. தாசரதியோ, கட்டுக்காவலின்றி பட்சிபோல் வனவாசத்தில இயற்கையின்பங்களில் தோய்ந்து மகிழ்ந்து இன்புற்றார்—நமது அஹிம்ஸா மூர்த்தியோ, இன்ப மென்பதை யௌவனத்திலிருந்தே துறந்து துணையிலாறு கட்டுக்காவலுள்ள சிறைவாசத்தையும் கள்ளர் கொலைஞர்கட் களிக்கும் இழிவான குற்றேவல்களையும் ஏற்றுச் சலியா மனத்தினராய் தேசப்பணியிடையில் ஈடுபட்டு துன்பவாழ்வினை மேற்கொண்டும் ஆறுதலோடு பொலிகின்றார். அயோத்தியிலிருந்து இலங்கை வீறுதியே இராமசரித நிகழ்ச்சிக்களன்—எட்டுத்திசைகளையே எல்லையாகவுடைய எல்லா அகிலவுலகங்களையும் காந்திசரிதம் நிகழ்ச்சிக் களனாகக் கொண்டுளது. கடவுணெறியை ஓரே துறையிற் கண்டகாலம் இராமபிரான் தோற்றம். கடவுணெறியையும் புறக்கணிக்கும் உணர்ச்சியாளரையும் தோற்றுவிக்கும் கலிகாலம் காந்தியடிகளின் தோற்றம்—ஆக்கம் அழிவு இரண்டிலும் உவத்தல் காய்தல் சிறிதுமின்றி மனம் அமைதி கெடாது முகமலர்ச்சி காட்டும் ஆண்மை இருவர்க்கும் பொதுவுடைமையே யாகும். கண்டோரை வசப்படுத்தும் தோற்றம் இராமரின் வனப்பு—கேட்டோரையும் முற்றத் துறந்த முனிவர் நிலையெய்தச் செய்யும் காந்திமகானின் அறவுரைகள். இந்திய நாட்டின் பாக்கியமே பாக்கியம்!

---

# மாதர் உலகம்



## பெண்களின் சாமுத்திரிகம்

(வி. ரா.)

கூந்தல்:—

1. மோதிரங்களைப்போல் சுருண்டும், சர்ப்பவடிவான அழகோடும், கருமையாயும், நீண்டும் உள்ள கூந்தலையுடைய பெண் எல்லாச் செல்வமும் பெற்று ராஜபத்தினிக்குச் சமமான போக போக்கியங்களை அநுபவிப்பாள்.

2. வண்டினுடைய இறகுகளுக்கு ஒப்பான கரிய கூந்தலையுடைய பெண்மணி அறிவு ஆற்றல்களோடு விளங்குவது மாத்திரம் அல்லாமல், கல்விச் செல்வம், பொருட் செல்வம் முதலிய சகல சம்பத்தும் வாய்ந்து வாழ்வாள்.

3. மெல்லிய கூந்தல் பொருந்தி யிருக்கும் பெண் சகல செல்வமும் பெற்று இன்ப மயமான வாழ்க்கை நடத்துவாள்.

4. ஒருபெண் எவ்வளவு அழகான கூந்தலைப் பெற்றிருக்கிறாளோ அவ்வளவு சிறப்பான இன்பத்தை அநுபவிப்பாள்.

5. சில பெண்களின் கூந்தல் தாம்பிர நிறமாயிருக்கும். அத்தகைய பெண்கள் தாங்கள் நினைத்ததைப் பிடிவாதமாகச் சாதித்துக் கொள்ளுவர்.

6. பெண்களுக்குக் கூந்தல் மிகவும் நீளமாகவும், மிகவும் குறுகலாகவும் இருக்கக் கூடாது என்று சாமுத்திரிக சாஸ்திர அறிஞர் கூறுகின்றனர்.

7. கூந்தல் தாராளமா யிருந்து, செவிகள் வரை வியாபித்திருக்கிற பெண் கல்வியறிவு படைத்தவளாக இருப்பாள். ஆனால் முன் கோபம் அதிகம்.

மூக்கு:—

1. மூக்கு நீளமாயிருக்கிற பெண், நிறைந்த வயதையும், புகழையும், செல்வத்தையும் பெற்று வாழ்வாள்.

2. மூக்குச் சிறுத்து, அமிழ்ந்திருக்கும் (சட்டி மூக்கு) பெண் வறுமையை அநுபவிப்பாள்.

3. மூக்கு மெல்லிதாகவும், மூக்குத் துவாரங்கள் சிறுத்தும் இருக்கும் பெண் பதிவிரதை ஆவாள். தெய்வ பயத்தோடு நடந்து கொள்ளுவாள். மிகுந்த செல்வத்தில் வளர்வாள்.

4. இடது பக்கத்து மூக்குத் துவாரத்துக்குச் சமீபத்தில் கரிய மச்சம் பொருந்திய பெண்மணி மிருதியான நிலங்களையும், வீடுகளையும் உடையவளாயிருப்பாள்.

5. மூக்கு வட்டமாகவும், மெல்லிதாகவும், நாசித்துவாரங்கள் இரண்டும் சமமாகவும் பொருந்தியிருக்கும் பெண் சௌபாக்கியவதியாக விளங்குவாள்.

6. மூக்கு சரிந்திருந்தாலும், சிறிதாயிருந்தாலும், துவாரங்கள் இரண்டும் பெரியவைகளாயிருக்கும் பெண் கணவனுடைய அன்புக்கு உரியவளாக மாட்டாள். ஸ்நேகம் இருக்காது. அவர்களுடைய வீட்டில் எப்பொழுதும் நோயாளிகள் இருப்பார்கள்.

7. கிளியினுடைய மூக்கைப் போன்றிருக்கும் பெண்மணி ராஜ மகிஷிக்கு நிகரான பாக்கியமும் ஒப்பற்ற கல்வித்திறமையும் வாய்ந்து நாடு முழுவதிலும் அபூர்வமான புகழை அடைவாள். எப்போதும் சுதந்தரத்தையே விரும்பியிருப்பாள்.

8. கிளிமூக்கு வாய்ந்த பெண்மணி வறிய குடும்பத்தில் பிறந்திருந்தாலும், இருபது வயது நிறைந்த அளவிலேயே சகல சம்பத்தோடுங் கூடி வாழ்வாள்.

கிருஷ்லக்ஷ்மி.

## "ஆனந்தபோதினி" 80 பக்கங்கள்

———:(o):———

திருவருளின் பூரண கருணா கடாக்ஷத்தாலும், அன்பர்களின் பேராதரவினாலும் நமது "ஆனந்தபோதினி" மாதசஞ்சிகை தமிழ் நாட்டில் தனிப்பெரும் சிறப்போடு தலைமை ஸ்தானம் வகித்து வருகிறது. பல அன்பர்களின் வேண்டுகோட்கிணங்க 16-வது ஆண்டு ஆரம்பமுதல் 80-பக்கங்களோடு பற்பல சிறப்பியல்புகளுடன் "ஆனந்தபோதினி" வெளிவந்து அன்பர்களை மகிழ்விக்கும் என்ற நற்செய்தியைத் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்! இப்பொழுது இருந்துவரும் சந்தாதாரர்களின் தொகையோடு இன்னும் அதில் ஒரு பாதிப்பேர்களாவது அதிகப்படியான புதிய சந்தாதாரர்களாய்ச் சேர்ந்துவிட்டால் 96 பக்கங்களில் நமது சஞ்சிகையை வெளியிடலாம் என்றும் முடிவு செய்திருக்கிறோம். ஆதலால் நமது சந்தாநேயர் ஒவ்வொருவரும் ஒரு புதிய சந்தாதாரரைச் சேர்ப்பதில் கொஞ்சம் சிரத்தை எடுத்துக்கொண்டால் இது எளிதில் முடிந்துவிடும் என்ற நம்பிக்கை எமக்கு உண்டு. எமது ஆவலை அன்பர்கள் நிறைவேற்றுவார்கள் என்று பெரிதும் எதிர்பார்க்கிறோம்.

ப-ர்.

# விலை விநோதம்.

(வித்வ ஸ்ரீ. ம. இராஜகோபால பிள்ளை.)

வியாபாரிகளிடம் சாமான் வாங்கப் போவோர் அவ் வியாபாரிகள் சொன்ன விலைக்கு சாமான்களை வாங்க இஷ்டப்படுவதில்லை. சாமான்களின் கொள்விலை முதலியவற்றைக் கேட்பதும், அங்கே இப்படி விற்கிறார்கள்—இங்கே அப்படி விற்கிறார்கள்—நீங்கள் மாத்திரம் அபாரவிலை கூறுகிறீர்கள்—இன்ன விலைக்குத் தரமுடியாதா? தரலாம்—அப்படி தருவதிலும் உங்களுக்கு லாபமே ஒழிய—நஷ்டமில்லை. என்ன சொல்லுகிறீர்கள்? என்று பல பல கேள்விகள் கேட்பது சகஜம். கடைக்காரர் பதில் சொன்னாலும அதற்கிசையாமல் மேலு மேலும் ஏதேதோ பேசி விலையைக் குறைக்கும்படி வாதிடுவார்கள். இவர்களுடன் போராடுவது வியாபாரிகட்கு மிகவும் சிரமமாயிருக்கும்.

இம்மாதிரி, சாமான்கள் வாங்க வருவோர் ஒவ்வொருவரிடமும் தங்கள் காலம் பெரிதும் வாக்கு வாதங்களில் கழிவது கண்ட வியாபாரிகள் "விற்பது குறைவானாலும் பேசித் தொலைவது பெரிதாயிருக்கிறதே" என்று பலர் ஒன்றுகூடி தீர்க்காலோசித்து "இனி நாம் பேசும் வழக்கத்தை விட்டுவிட வேண்டும். நமது சாமான்கள் கொஞ்சங் கொஞ்சமாகவாவது விற்பனையாய் வரட்டும்—பாதகமில்லை. தொண்டை யல்லவோ வரண்டுபோகிறது" என்று கூறி, நமக்குக் கட்டும்படியான விலைகளைப் பலகையில் எழுதி, கடைகளின் முன் தொங்கவிட்டு விட்டால் பேச்சு மட்டுப்படும் என்று தீர்மானித்துக் கொண்டனர். அவ்வாறே அவரவர்கள் செய்ய வாரம்பித்து விலைகளை மூவிதமாகப் பகுத்துக் கொண்டார்கள்.

அவை:—1. உயர்தரவிலை; (அதிகவிலை) 2. கறார்விலை; 3. கைவிலை அல்லது இன்றைக்கு ரொக்கம்—நாளைக்குக் கடன் என்பவை.

இவற்றைப் பலகைகளில் தீட்டி, கடைகளின் முன்னர் மாட்டிவிட்டனர். இவ்வேற்பாடு ஏழை மக்களுக்கு எவ்வித அனுகூலமுஞ் செய்வதற்கில்லை. அவர்கள், மிஞ்சி ஏதாவது பேச வாய்திறந்தால் "பேசவேண்டாம், பலகையைப் பாருங்கள்" என்று சுட்டிக் காட்டி, தங்கள் பேச்சை மீத்திக் கொள்கின்றனர்.

இதுபோலவே சர்வேஸ்வரன் தானுமொரு கடை யேற்படுத்திக் கொண்டு முத்தியாகிற சாமானை விற்பனை செய்துவருகிறான். இதை வாங்க (அடைய) எல்லோராலு முடியாது; கஷ்ட சாதனங்களை மேற்கொள்ள வேண்டும். மாயா சம்பந்தமான இந்த நிலவுலகிலிருந்து அச் சாதனங்களில் ஈடுபட்டு மெய்ஞ்ஞானங் கைவரப்பெற்ற சிலரே அதற்குரியவராவர்—கறார் விலை—ஏனையோர் அச்சாதனங்களிற் சிறிது குறைவுடையவரா யிருந்து, பகவானை நோக்கி "மந்தமதியினரான எங்களுக்கு ஆயுளோ கொஞ்சம்; முத்திக்கு வேண்டிய சாதனங்கள் அவ்வளவையும் பூரணமாகச் செய்து முடிப்பதற்குப் போதுமான காலம் இங்கில்லை; முன்னதாக (கடனாக) முத்தியை

எங்களுக் கனுக்கிரகித்து விட்டால் அங்கிருந்துகொண்டு பாக்கியாயுள்ள சாதனங்களைப் பூர்த்தி செய்து விடுகிறோம்" என்றால், எம்பெருமான் "அது முடியாது; என் கடையில் கடன் கட்டில்லை—கறார்—'ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்க்கே, வானம்' என்று கண்டிப்பாகச் சொல்லி விடுகிறான்.

இந்த அசௌகரியம் ஸ்ரீ இராமநுஜரிடம் இல்லை. அவர் உலகத்தைத் திருத்தி உய்விக்குங் கருத்துடனே இங்கு அவரித்தவர். நம்பெருமாள் அடி நம்பிய பாத்திய நாருக்கே வீடு என்று நற்குரு சாற்றிய, செம்பெரு முறை கடந்து உம்பரும் போற்றிய திருமந்திரத்தை (எல்லோரு முணர்ந்துய்ய) கோபுர மேறித் தூற்றிய பேரருளாளர். அவர் பகவானை தமது திறமையால் தம் வசப்படுத்திக்கொண்டு முதலியாகிற சரக்கு விற்கும் கடைக்கு ஏஜண்டு ஆக இருக்கிறார். அவரிடம் அச் சரக்கு அதிகவிலை, கறார்விலை, கைவிலை என்கிற பாகுபாடில்லை; சரணாகதியடைய வேண்டிய தொன்றையே எத்தகைய நிபந்தனையு மின்றி அவர் விரும்புவது. இவ்வுபாயத்தை யறிந்த திருவரங்கத்தமுதனார் பிரபந்த காயத்ரியில்,

"ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்க்கு
வானங்கொடுப்பது மாதவன்; வல்வினை யேன்மனத்தில்
ஈனங்கடிந்த இராமாநுஜன் றன்னை யெய்தினர்க்கு அத்
தானங்கொடுப்பது தன்தக வென்னுஞ் சரண்கொடுத்தே" என்றார்.

இது திவ்யப்ரபந்தத் திரட்டின் கருத்து. எளிதில் முத்தி வேண்டுவோர் இராமாநுஜரை அடைய வேண்டுவது போல, எளிதில் சுயாட்சி வேண்டுவோர் அதற்கு ஏஜண்டாக அவதரித்துப் பாடுபடும் ஸ்ரீமத் காந்தி யடிகளை அடைந்து அவருடன் ஒத்துழைக்கவேண்டும்.

## ஒரு விண்ணப்பம்.

"ஆனந்தபோதினி" மாதப் பதிப்பும், வாரப்பதிப்பும் வெளிவருவது எல்லாருக்கும் தெரியும். புதிதாகச் சந்தாநேயர்களாகச் சேரும் சில அன்பர்கள் மாதம்—வாரம் என்ற விபரம் குறிப்பிடாமல் "ஆனந்தபோதினி"யை வி. பி-யில் அனுப்பவேண்டியது என்று எழுதிவிடுகிறார்கள். நாங்கள் எதை என்று கண்டு கொள்ளுவது? மறுபடியும் விபரம் எழுதிக்கேட்பதில் வீண் நஷ்டமும் காலதாமதமும் ஆகும்; ஆதலால் இனிமேலாவது ஆர்டர் கொடுக்கும் நண்பர்கள் விவரம் குறிப்பிடுவார்களாக.

மானேஜர்.

# நேயர்களுக்கு ஒரு வேண்டுகோள்.



## 16-வது ஆண்டின் முன்னறிக்கை.

**அன்பர்களே!**

நாளிது பிரமோதூதஹு ஆடிமீ கஉ (16-7-30) நமது "ஆனந்த போதினி"க்கு 16-வது ஆண்டு பிறக்கப் போகிறது. 16-வது ஆண்டில் "ஆனந்த போதினி" பற்பல சிறப்பியல்புகளுடன் பருவத்துக் கேற்ப வளர்ச்சி பெற்று 80-பக்கங்களோடு வெளிவந்து உங்களை இன்புறச் செய்யும் என்ற நற்செய்தியை இப்பொழுதே தெரிவிக்கின்றோம். ஆகையால் "ஆனந்த போதினி"யின் பால் அன்பு பூண்டு ஆதரித்து வரும் அன்பர்கள் எல்லாரும் 16-வது ஆண்டின் சந்தாத் தொகையை நாளிது பிரமோதூதஹு வைகாசி மாதம் முடிவு (13-6-30) க்குள் மணியார்டர் மூலமாகவோ, நேரிலோ எங்களுக்கு கிடைக்கும்படி செய்யவேண்டும். பத்திரிகையை நிறுத்திக்கொள்ள விரும்புவோரும் டை 13-6-30 தேதிக்குள் எங்களுக்குக் கடித மூலமாகவோ நேரிலோ தெரிவித்துவிட வேண்டும். டை சந்தாத் தொகையை முன் பண மாகச் செலுத்திவிடும் நேயர்களுக்கு வழக்கப்படி ஆனிமாத சஞ்சிகையும் அதற்குப் பின் வரும் சஞ்சிகைகளும் சாதாரணத் தபாலில் அனுப்பப்பட்டு வரும். பத்திரிகையை நிறுத்திவிடும்படி தெரிவித்தவர்களுக்கு ஆனிமீ சஞ்சிகை மாத்திரம் சாதாரணத் தபாலில் வந்துவிடும். நாம் மேற்குறிப்பிட்டுள்ள படி சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பாதவர்களுக்கும், தங்களுக்குப் பத்திரிகை தேவையில்லை என்ற விபரத்தைத் தெரிவிககாதவர்களுக்கும் அடுத்த 16-வது ஆண்டின் சந்தாத் தொகைக்காக பிரமோதூதஹு ஆனி மாத சஞ்சிகை வி. பி. யில் அனுப்பப்படும். எங்கள் வேண்டுகோட்படி 16-வது ஆண்டின் சந்தாத் தொகையை முன்பணமாக அனுப்பாமலும், பத்திரிகை தேவையில்லை என்று தெரிவிக்காமலும் சும்மா இருந்துவிடும் நேயர்களுக்கு "மௌனம் சம்மதம்" என்ற நியாயத்தை அநுசரித்து அவர்கள் வி. பி. யில் பெற்றுக் கொள்ள விரும்புகிறார்கள் என்று நாங்கள் தீர்மானம்செய்து ஆனி மாத சஞ்சிகையை 16-வது ஆண்டின் சந்தாவுக்காக வழக்கம்போல் வி. பி. யில் அனுப்பி வைப்போம். இந்த நண்பர்கள் வி. பி. யைத் திருப்பிவிடாமல் தயைகூர்ந்து பெற்றுக் கொள்ளுமாறு வேண்டுகின்றோம். இவ்வாறு வி. பி. யைப் பெற்றுக் கொள்ளுகிறவர்களுக்கும் பத்திரிகைகள் வழக்கம்போல் அனுப்பிவைக்கப்படும். வி. பி. யில் அனுப்புவதால் 3-அணா அதிகச் செலவும் பத்திரிகை வந்துசேர வீண் காலதாமதமும் ஆகும். ஆதலால் அன்பர்கள் எல்லாரும் முன்பணம் அனுப்பி ஆதரிப்பதே நலம்.

பினங்கு சிங்கப்பூர் முதலிய மலேயா நாடுகளுக்கும் இதர வெளிநாடுகளுக்கும் வி. பி. இல்லையாகையால் அவ்விடங்களிலுள்ள சந்தா நேயர்கள் எல்லாரும் சந்தாத் தொகையை மணியார்டர் மூலம் முன் பணமாகவே அனுப்பிவிட வேண்டும்.

அன்பு நிறைந்த நண்பர்களே! யாம் மேலே எடுத்துக் காட்டிக் குறிப்பிட்டிருக்கும் விபரங்கள் எல்லாம் உங்களுக்கும் எமக்கும் அநுகூலமானவைகளாகும். வீண் குதர்க்க விவாதம் செய்து எமக்கு அநாவசியமான சிரமத்தை உண்டாக்காமல் நேயர்கள் எல்லாரையும் இவற்றின்படி நடந்து கொள்ளுமாறு வேண்டிக் கொள்ளுகின்றோம். விபரத்தை நன்கு ஊன்றி உணராமல் வெறும் தர்க்கஞ் செய்து கடிதங்கள் எழுதி எமக்கு வேதனையை உண்டாக்குவோரின் மனப்போக்கைப்பற்றி யாம் ஆண்டுதோறும் குறிப்பிட்டு வந்திருக்கின்றோம். அவற்றை உணர்ந்திருக்கிற புத்திமான்களுக்கு அவர்களுடைய செய்கை நன்மை பயக்காது என்பதும், யாம் செய்திருக்கும் ஏற்பாடே இருபாலாருக்கும் நலந்தரத்தக்க தென்பதும் நன்கு விளங்கும். ஆகையால் பேரன்புடைய நண்பர்கள் விஷயங்களை நன்கு ஆராய்ந்து வீண் தர்க்கம் செய்யாமல் எம்முடைய ஏற்பாட்டின்படி நடந்து கொள்ளுவார்கள் என்று பெரிதும் எதிர்பார்க்கின்றோம்.

## முக்கிய குறிப்பு

முன் பணம் அனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்கள் சந்தா நம்பரைக் குறிப்பிட்டு "16-வது ஆண்டுக்கு" என்று விபரம் எழுதியனுப்ப வேண்டும். புதிய சந்தாதாரர்களாகச் சேருகிறவர்கள் "புதிய ஆண்டுக்கு" என்ற விபரம் எழுதியனுப்பவேண்டும். பழைய சந்தாதாரர் ஒவ்வொருவருக்கும் உரிய சந்தா நம்பர் ஒவ்வொரு மாதத்திலும் வரும் சஞ்சிகையின் மேல் உறையில் வலது பக்கத்தில் எழுதப்பட்டிருக்கும். சந்தா நம்பர் குறிப்பிடுவோர் அதைப் பார்த்துக் கடிதங்கள், மணியார்டர் முதலியவற்றில் எழுதவேண்டும். மேல் உறையில் இடப்பக்கத்தில் 1190 என்ற ரிஜிஸ்டர் நம்பர் அச்சிடப்பட்டிருக்கும். அதை எழுதிவிடக் கூடாது. மேலே விவரித்தபடி, கையால் எழுதப்பட்டிருக்கும் மேல் விலாசங்களில் கையால் எழுதப்பட்ட நம்பரையும், அச்செழுத்துக்களில் உள்ள விலாசங்களில் அச்செழுத்து நம்பரையும் குறித்தெழுத வேண்டும். பழைய சந்தாதாரர்களில் சந்தா நம்பர் தெரியாதவர்கள் முன்பணம் அனுப்பாமல் வி. பி. யிலேயே சஞ்சிகை பெற்றுக் கொள்வது நலம்.

பழைய சந்தாதாரர்களில் சஞ்சிகையை நிறுத்தி விடும்படி எழுதுவோரும் மேற்குறித்தபடி தங்கள் சந்தா நம்பரைக் குறித்தெழுத வேண்டும்.

"ஆனந்தபோதினி" 16-வது ஆண்டு ஆரம்ப முதல் 80 பக்கங்களோடு வெளிவருவதால் சிங்கப்பூர், பினங்கு முதலிய வெளி நாடுகளுக்கு மாத்திரம் தபால் செலவு அதிகம் ஆகும். ஆதலால் தபால் செலவைச் சேர்த்து ஷை வெளி நாட்டு அன்பர்கள் ரூபா 1—8—0 மணியார்டர் மூலம் அனுப்பி வைக்கவேண்டும்.

பத்திராதிபர்.

# மனோ சக்தி.

—:(o):—

(ஜகதீச குமார சர்மா.)

சேதனுசேதனப் பொருள்களைத் தம் சித்தப்படி இயக்கவல்ல துறவிகளும் இராஜயோகத்தின் தந்தையாகிய பதஞ்சலியும் சித்தர்களும் வாழ்ந்த நம் நாட்டின்கண் மனோசக்தியை விளக்கும் நூலொன்றெழுதுதல் மிகையாம். ஆயினும் மனிதன் தன் வல்லமைகளைப் பன்முறையும் நினைவு கூர்ந்து அவற்றை உபயோகிப்பது சிறந்த பயனளிப்பதாகையால் மனோசக்தியைக் குறித்துப் பன்முறை ஆராய்வது நலமேயாம். அந்நோக்கத்தோடு யான் சில உண்மைகளை இங்கே வெளியிடத் துணிகின்றேன்.

பிரசங்க மேடைகளில் நின்றுகொண்டு காகம்போல் கரைவதிலும் சுவாநுபவத்தில் ஒன்றை அநுஷ்டித்து அதில் நிலைத்து நிற்பதே சிறந்ததாகும். பேச்சற்று செயலுற்றிருத்தலே உத்தமம். ஆயினும் மாந்தர் தம்முள் நிறைந்து விளங்கும் மனோசக்தியை வெளிப்படுத்த வேண்டுமாயின், அவர்கள் முதலில், அச்சக்தியைக் குறித்தறிய வேண்டும் ஆதலால், யான் மனத்தத்துவ சாஸ்திரங்களில் உண்மையெனக் கண்ட தத்துவங்களை இங்கே விரித்தெழுதுகின்றேன். கூறவேண்டிய விஷயங்களோ இவ்வுலகத்தைவிட விரிவாயுள்ளன. அதனைக் கூறுவதற்குக் கிடைத்துள்ள காலமோ மிகக் குறுகியது. கூறுவதற்குக் கிடைத்த இடமோ மிகவும் குறைந்தது. ஆயினும், கூடியவாறு சுருக்கி வரைகின்றேன். நீங்களும் பொறுமையோடும் அவாவோடும் யான் கூறுவதைக் கேட்டு வருவீர்களாயின், யான் கண்ட உண்மைகளை நீங்களும் சுவாநுபவத்தில் கொண்டுவரமுடியும் எனக் கருதுகின்றேன்.

செய்தற்குரிய நற்கருமத்தை நன்றாய்ச் செய்தல் நலமாம். எதனையும் நன்றாய்ச் செய்வதற்கு நன்மனம் இன்றி யமையாதது. அங்ஙனமே மனோ சக்தி விஷயமாகவும் நாம் கருத வேண்டும். தம்முள் மறைந்து தூங்குகின்ற மனோ சக்தியைத் தட்டியெழுப்பிப் பயன் படுத்திக் கொள்ளத் தெரியாதவர்களுக்கு மனத்தத்துவ சாஸ்திரத்தினின்று வெளிப்படுகின்ற அற்புதமான வல்லமைகளும் அதனியக்கங்களும் அமானுஷீகப் பிரகிருதியாகவும் அதியாச்சரியமாகவும் தோன்றும். மனிதனிடத்தில் இயல்பாகவே ஏற்பட்டு விளங்குகின்ற சர்வ வல்லமை வாய்ந்த மனோ சக்தியைக் குறித்துச் சந்தேகிக்கின்றவர்கள் தாங்கள் பிரத்தியக்ஷமான சான்றுகளேதும் காணவில்லை என்று கருதி இச் செய்தியைப் புறக்கணித்துத் தள்ளிவிடாதிருக்குமாறு அவர்களை எச்சரிக்கின்றேன். அவ்வாறு புறக்கணித்துத் தள்ளுகின்றவர்கள் தமது அறியாமையினாலும் தவறான தாரணையினாலுமே அங்ஙனம் செய்கின்றார்கள். ஆதலால் இவ்விஷயங்களை ஆராய்வோர் முதன் முதல் தமது உள்ளத்தினின்று அவநம்பிக்கை, சந்தேகம், தவறுதலான கருத்துக்கள், இதற்கு முன் தாம்

இது விஷயமாகக் கிரகித்திருந்த கொள்கைகளனைத்தையும் வேரோடு பறித்தெறிந்து, யோக சூத்திரத்தில் கூறியுள்ளபடி, மனதை ஒரு தெளிவான ஸ்படிகம்போல வைத்துக் கொண்டால் மேலே கூறப்போகிற விஷயங்களைச் செவ்வையாகக் கிரகித்து நலம் பெறுவர் எனக் கருதுகின்றேன்.

## நம்பிக்கை

அற்பச் சிறு காரியம் கைகூட வேண்டுமாயினும், மகத்தான காரியங்கள் கைகூட வேண்டுமாயினும், அவைகளின் பொருட்டு மனிதனுக்கு இருக்க வேண்டிய இன்றியமையாத தன்மை நம்பிக்கையேயாம். நம்பிக்கையென்னும் அரிய குணமுடையவர்கள் தாம் கருதுகின்ற நியாயமான காரியத்தையும் கைகூடச் செய்து கொள்வர். இதனைப் படிக்கும் என் நண்பரே! நீர் ஜயம் பெறுவீர் என்று உறுதியாய் நம்புகிறீரா? உமக்கு உம்முடைய மனவலிமையில் பூரண நம்பிக்கை இருக்கின்றதா? ஜயம் பெறுமட்டும் இடையில் ஏற்படும் இடையூறுகளனைத்தையும் மேற்கொண்டு கருமமே கண்ணாய், கைக்கொண்ட நோக்கத்தை சித்திபெறச் செய்யும் உம்முடைய மனோ சக்தியில் உமக்கு நம்பிக்கை இருக்கின்றதா? நீர் மனதத்துவ சாஸ்திரத்தின் உண்மைகளை முழுமனதோடு நம்பி இந்த அறிவினால் மகாவல்லமை பெறுவேனென்று நம்புகிறீரா? நண்பரே! நீர் உம்முடைய அளவிறந்த ஆற்றலை நம்பும். நீர் மனம் வைத்தால் உம்மால் ஆகாத காரியமில்லை என்று நம்பும். மனத்தத்துவ சாஸ்திரத்தின் உண்மைகளை நம்பும். இதோ! உம்முன் ஜயலக்ஷ்மி உமக்கு வாகைமாலை சூட்டக் காத்துக்கொண்டிருக்கிறாள்.

(தொடரும்.)




அயர்லாந்து பிரதேசத்தில் மூப்பதிலிருந்து மூப்பத்தைந்து வரை வயதடைந்த பெண்கள் நூற்றுக்கு நாற்பது பேர் கலியாணம் இல்லாமல் இருக்கிறார்களாம்.

* * *

ஷை தேசத்தின் ஜனத்தொகையில் நான்கில் ஒருபங்கு ஆண்கள் பிரமச்சாரிகளாக இருக்கிறார்களாம். 25-30 வயது வரை உள்ள ஆண்கள் நூற்றுக்கு 80 பேர்களுக்கு மேலாகவே கலியாணம் இல்லாமல் இருக்கிறார்களாம்.

* * *

லண்டனில் பெண் போலீஸார் தொகை இரட்டிக்கப் படுமாம். 1925ஆ-ல் இருபத்து நான்கு ஐம்பதாக்கப்பட்டது. இப்பொழுது நூறு.

* * *

லண்டனில் கல்விக்காக பதின்மூன்று கோடியே இருபத்தொன்பது லட்சத்து மூவாயிரத்து நானூற்று இருபத்தெட்டுப் பவுன்கள் இந்த வருஷத்தில் செலவழிக்கப் படுமாம். இந்தத் தொகையில் சென்ற வருஷத்தை விட இரண்டு லட்சத்துப் பன்னீராயிரத்து ஐந்நூற்று முப்பத்திரண்டு பவுன்கள் அதிகப்படுத்தப் பட்டிருக்கின்றனவாம்

* * *

இங்கிலாந்து ஜனங்கள் ஒரு தினத்துக்கு அதிகமாக ஒரு அணாவை பிரிட்டிஷ் சாமான்களை வாங்குவதில் செலவழித்தால் லட்சம் பேருக்கு உத்தியோகம் கொடுக்கலாம் என்று ஒரு வர்த்தக அறிக்கை வெளியிடுகின்றது.

* * *

லண்டனில் உள்ள ஒவ்வொருவரும் சராசரி ஒரு வருஷத்தில் சுமார் 512 தடவைகள் யாத்திரை செய்கிறார்களாம்.

* * *

அமெரிக்கன் ஸினிமாக்களில் ஒருவாரத்தில் செல்லுவோரின் தொகை சுமார் 12,0000, 000; போன ஜன கணிதப்படி ஐக்கிய மாகண ஜனத்தொகை— 10,57,10, 620; இதனால் அநேக ஜனங்கள் வாரத்துக்கு இரு முறை செல்லு வார்கள் என்று தெரிகிறது.

* * *

உலகத்தில் பிரமாண்டமான ஸ்தூபிகள் மூன்று: 1. ரோமிலுள்ள செயின்ட் பீட்டர்ஸ். 2. லண்டனிலுள்ள செயின்ட் பால்ஸ் 3. மாஸ்டாவிலுள்ள மண்டா.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**பிரமோதூதஹு வைகாசிமா—கலியுகாதி 5032, சாலிவாகனம் 1853**
**பசலி 1339—கொல்லமாண்டு 1105—ஹிஜரி 1348,**
**இங்கிலீஷ் 1930ஹு மேமா—ஜூன்மா**

| வைகாசி | மேமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | [ஷுபதி புண்யகாலம் |
| 1 | 14 | புத | துதி44-25 | அனு7-28 | சித்60 | ரிஷபரவி நா-16-53, விஷ் |
| 2 | 15 | வியா | திரி47-3 | கே10-55 | பி10-55சி | |
| 3 | 16 | வெ | சது50-30 | மூல15-38 | அ15-38பி | |
| 4 | 17 | சனி | பஞ்55-48 | பூரா21-30 | சித்60 | |
| 5 | 18 | ஞா | சஷ்60 | உத்26-18 | அமி60 | |
| 6 | 19 | திங் | சஷ்1-25 | திரு35-33 | அ35-33சி | |
| 7 | 20 | செவ் | சப்7-18 | அவி42-50 | சி42-50மா | |
| 8 | 21 | புத | அஷ்12-53 | சத49-28 | சி49-28அ | |
| 9 | 22 | வியா | நவ17-40 | பூர55-5 | சித்60 | |
| 10 | 23 | வெ | தச21-18 | உத்59-20 | சி59-20ம | |
| 11 | 24 | சனி | ஏகா23-13 | ரே60 | மா60 | |
| 12 | 25 | ஞாய | து23-18 | ரே1-45 | அ1-45சித் | வியாதியஸ்தர் மருந்துண் |
| 13 | 26 | திங் | திர21-28 | அஸ்2-25 | சித்60 | சரஸ்வதி நதி புஷ்கரம் |
| 14 | 27 | செவ் | ச●18-5 | பர1-25 | சித்60 | கிருத்திகை,சர்வத்திர அமா |
| | | | | கி✲58-53 | | வாசை, அவமாகம் |
| 15 | 28 | புதன் | அ13-18 | ரோ55-8 | சித்60 | கத்தரி முடிவு |
| 16 | 29 | வியா | பிர7-18 | மிரு50-33 | மா60 | சந்திர தெரிசனம் |
| 17 | 30 | வெ | துதி0-35 | திரு45-20 | சித்60 | கரிநாள், அவமாகம், ரம்பா |
| | | | திரி53-28 | | | திரிதியை, கல்கிஜயந்தி |
| 18 | 31 | சனி | சது46-15 | புன40-8 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 19 | 1930 ஜூன் 1 | ஞா | பஞ்39-15 | பூச35-5 | சித்60 | அவமாகம்,சர்வமுகூர்த்தம் |
| 20 | 2 | திங் | சஷ்32-43 | ஆயி30-28 | சி30-28ம | சஷ்டி, நவக்கிரக சாந்தி |
| 21 | 3 | செவ் | சப்26-50 | மக26-38 | சித்60 | குளம் கிணறுவெட்ட |
| 22 | 4 | புதன் | அஷ்21-48 | பூர23-38 | அமி60 | ஆயுதம் உபயோகிக்க |
| 23 | 5 | வியா | நவ17-53 | உத்21-35 | மா21-35சி | தசஹரா விரதம் |
| 24 | 6 | வெ | தச14-55 | அஸ்20-30 | அ20-30சி | சர்வ முகூர்த்தம் |
| 25 | 7 | சனி | ஏகா13-0 | சித்20-30 | ம20-30அ | சர்வ, மத்வ ஏகாதசி |
| 26 | 8 | ஞா | து12-5 | சுவா21-28 | சி21-28ம | பிரதோஷம், சுப முகூர்த் |
| 27 | 9 | திங் | திர12-0 | விசா23-20 | மா23-20சி | நரசிம்ம ஜயந்தி [தம் |
| 28 | 10 | செவ் | ச○12-58 | அனு26-13 | சி26-13மா | பௌர்ணமி, ரிஷப பூஜை |
| 29 | 11 | புத | பவு14-53 | கேட்30-3 | சித்30-3ம | குளம் கிணறு வெட்ட |
| 30 | 12 | வியா | பிர17-55 | மூல34-53 | சித்60 | மாவெடாங்க |
| 31 | 13 | வெ | துதி21-45 | பூரா40-40 | பி40-40சி | கடன் தீர்க்க |
| 32 | 14 | சனி | திரி26-43 | உத்47-15 | சித்60 | மிதுனரவி நா-33-33 |

| | | | |
|---|---|---|---|
| செவ் | ராகு | குரு-சு சுக்-பு | |
| | 6-மிது-சுக் 11-மே-செவ் 13-மிது-குரு 31-கடக-சுக் | | |
| சனி | | கேது | |

**Printed & Published by N. Munisawmi Mudaliar,**
**at the "Ananda Bodhini" Power Press,**
**Sawyer Chinnathambi Mudali St., Madras.**